# அரசியல் அறிவு

ஆசிரியர்

**M. இரத்தினசாமி**

மொழிபெயர்ப்பு

கொ. வே. ரா.



பதிப்பாளர்கள்

**நாதன்ஸ்**

**24, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு**

**மவுண்டு ரோடு :: சென்னை - 2**

*சென்னைப் பிரதம நீதிபதி*
**பி. வி. ராஜமன்னார்** *அவர்களின்*

# பொதுவுரை

*தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் ஆதரவில் முதலில் வெளியாகும் நூல்கள் தென்னிந்திய மக்களுக்கு அளிக்கப்படுகின்றன. இந்த நிலையம் 'போர்டு' நிலையத்தாரின்* **(Ford Foundation)** *நன்கொடையால் உருவாகி வளர்ந்தது. இதன் நோக்கம் தென்னிந்திய மொழிகளாகிய தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளிலும் அறிவும், கலையும் நிறைந்த நூல்களைக் குறைந்த விலைக்கு வெளியிடுவதை ஆதரிப்பதேயாகும். இந்நோக்கத்தை நிறைவேற்ற 'போர்டு' நிலையத்தாரும் தென்னிந்தியப் பல்கலைக் கழகத் துணை வேந்தர்கள் எழுவரும் சேர்ந்து சிந்தித்து, ஏராளமான, பல்வகையான சிறந்த நூல்களைக் குறைந்த விலையில் வெளியிட்டு விற்பனைசெய்ய உதவ இந்த ஸ்தாபனத்தை நிறுவினர். இதற்கென நிறுவப்பட்ட மூன்றுண்டுத் திட்டத்தின் முதல் வெளியீடு இது. இந் நிலையம் கடுநடையுடைய நூல்களை வெளியிட மேற்கொள்ளவில்லை. ஆங்கிலக் கல்வி இல்லாத படித்த பாமரனுக்கும் பயன்படுமாறு எளிய நடையில் இன்பமும், பயனும் தரும் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்தலே இந்த ஸ்தாபனத்தின் இலட்சியமாகும்.*

*இலக்கிய வளம் நிறைந்த மூல நூல்களைப் பதிப்பித்தல், கலை, விஞ்ஞானப் புத்தகங்களை வெளியிடல், உலகத்திலேயுள்ள மற்ற மொழி நூல்களை மொழி பெயர்த்தல் ஆகியவையே இந்த ஸ்தாபனம் செய்ய விரும்பும் பணிகளாகும்.*

"மலிந்த விலையில் உயர்ந்த நூல்"—இதுவே தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் இலட்சியம். இந்த நோக்கம் எவ்வளவு தூரம் இம்முதல் வெளியீட்டால் நிறைவேறியிருக்கிறது என்பதைப் பொதுமக்களே சொல்ல வேண்டும். இம்முயற்சியின் பயனும் வெற்றியும் பத்தாண்டுகளுக்குப் பிறகே வெளிப்படலாம். ஆனால், இத்திட்டத்தின் முக்கியத்துவம் உண்மையான கற்பனை நோக்குடையவர்களுக்குப் புலனாகும். இதனால் விளையக்கூடியன எண்ணிறந்தன. மலிவான இப்புத்தகங்களைத் திறமையான வகையில் தென்னிந்தியா முற்றிலும் பரப்பினால் இவை பட்டித் தொட்டிகளிலுள்ள மக்கள் கரங்களிலும் தவழும். அப்போது இந்நாட்டின் உயிர்நாடி போன்ற அந்த மக்களின் வாழ்வில் இன்ப ஒளி வீசும்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளுக்காகவே இங்கிலையம் ஏற்படுத்தப்பட்டதற்குத் தக்க காரணங்கள் உண்டு. ஏனெனில், இவை தென் நாட்டு மொழிகள். "தக்கணம்" என்பது பூகோள நூற்படி பழைய இந்தியாவிலே, விந்தியத்தின் தென் பாகமானாலும், பண்பாட்டின்படி இந்நான்கு மொழிகளையோ, அவற்றின் கிளை மொழிகளையோ பேசும் மக்களைக் கொண்ட பிரதேசத்தையே குறிக்கும். இம்மொழிகள் நான்கும் ஓரினத்தன என்பதில் ஐயமில்லை. "திராவிடம்" என்ற அடைமொழியைச் சேர்க்க நான் தயங்குகிறேன். ஏனெனில், அது 'மொழி', 'இனம்' என்ற பொருளில் கொள்ளப்படாமல், கருத்து வேற்றுமை, அரசியல் என்ற நோக்குடன் பயன்படுத்தப்படுகிறது. இம்மொழிகளிடையே காணப்படும் ஒருமைப்பாடு தவிர, இம்மொழி பேசும் மக்களிடையேயும் காணப்படும் கலாசாரம் இப்பகுதியை இந்தியாவின் ஏனைய பகுதியினின்றும் தனித்துக் காட்டுகிறது. சாதாரணமாக நாம் அறிந்துகொள்ளும் கர்நாடக சங்கீதமும் இதைத் தெளிவுபடுத்தும். அவ்வாறே

இப்பகுதிகளில் உள்ள சிற்பக் கலையும், கட்டடக் கலையும் தனிப் பெருமையுடையன. மக்களின் பழக்க வழக்கங்கள், சடங்குகள், விழாக்கள் முதலியவற்றிலும் குறிப்பிடத் தக்க ஒருமைப்பாட்டைக் காண்கிறோம். இத்தனிச் சிறப்புக்கள் இந்நூலகத்தாரின் வெளியீடுகளால் பிரதிபலிக்கும் என நம்புகிறேன். அத்துடன் இந்தியப் பண்பாட்டை விளக்கும் நூல்களையும் பிற நாட்டு மொழிகளில் உள்ள நூல்களின் மொழிபெயர்ப்புகளையும் வெளியிடுவதன் மூலமாகக் குறுகிய வேறுபட்ட மனப்பான்மை தவிர்க்கப்படும்.

**பி. வி. ராஜமன்னார்**

# முன்னுரை

திரு. கே. பி. கேசவமேனன்,

ஆசிரியர், 'மாத்ருபூமி'

சுதந்திரம் கிடைத்த பிறகு நாம் முதலில் செய்த பணி இந்திய அரசியலமைப்பை வகுத்ததுதான். என்றாலும், அதற்கு முன்பே அரசியல் அமைப்பை உருவாக்கும் வேலை ஆரம்பமாகிவிட்டது.

1946 டிசம்பர் மாதம் 9-ம் தேதி ஆரம்பிக்கப்பட்ட இந்திய அரசியல் நிர்ணய சபை 1949 நவம்பர் 26-ம் தேதி தன் பணியை முடித்துக்கொண்டது. இந்தச் சபை உலகத்திலுள்ள நாடுகளின் பல்வேறு அரசியல் அமைப்பையும் மிகக் கவனமாக ஆராய்ந்து, இந்திய நிலைமைக்கும், இங்குள்ள மக்களின் திறமைக்கும் ஏற்ற பகுதிகளை அவற்றிலிருந்து எடுத்துக் கொண்டது. இச்சபை மேற்கொண்ட வேலையின் பெரிய அளவையும், அது சமாளிக்க வேண்டிவந்த கஷ்டங்களையும், அடைந்த வெற்றியையும் எண்ணும்போது அது இவ்வளவு விரைவில் தன் பணியை முடித்துக்கொண்டது மிகவும் வியக்கத்தக்கதே என்பதில் ஐயமில்லை.

நீதி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற தூண்களின் மேல்தான் நமது புதிய ஜனநாயகம் கட்டப்பட்டிருக்கிற தென்பதை அரசியல் அமைப்பின் முன்னுரையைப் பார்த்தால் விளங்கும்.

எல்லாப் பிரஜைகளும் சுதந்திரமாகவும், சட்ட ரீதியாகவும், வெளியிடப்பட்ட விருப்பத்திற்கு இணங்கிய ஜனநாயக நாடாக இந்தியா விளங்க வேண்டும் என்பது

தான் நமது அரசியல் அமைப்பின் அடிப்படை நோக்கம். ஜனநாயகம் என்ருல் என்ன என்பதை வரையறுத்துச் சுருக்கமாக விளக்குவது அவ்வளவு எளிதல்ல.

ஆனுல், அரசாங்கத்தைப் பாதிக்கிற விஷயங்களில் மக்களின் விருப்பம் தலைகாட்டும் போதும், ஓட்டுரிமை யுள்ள பெரும்பான்மை மக்கள் அரசாங்க இயந்தி ரத்தைக் கட்டுப்படுத்தவும், இயக்கவும் ஆரம்பிக்கும் போதும் ஜனநாயகத்தின் தன்மையை உணரமுடிகிறது.

பிரஞ்சுப் புரட்சிக் காலத்தில் அரசியல், சமுதாய ஜனநாயகத்திலேயே அனைவரின் நாட்டமும் இருந்தது. ரஷ்யப் புரட்சியிலோ பொருளாதாரத் துறையிலே கவ னம் செலுத்தப்பட்டது. ஆனுல், நாம் சமுதாயம், அரசி யல், பொருளாதாரம் போன்ற எல்லாத் துறைகளிலும் ஜனநாயகத்தை நாம் வேண்டி நிற்கிருேம்.

ஒரு ஜனநாயகத்தின் வெற்றி, அந்நாட்டிலுள்ள சராசரிப் பிரஜைகளின் குணவிசேஷங்களையோ அல்லது திறமையையோ மட்டும் பொறுத்ததல்ல. பொதுமக்கள் விஷயங்களைப் பற்றி எவ்வளவு தூரம் தெரிந்துவைத்தி ருக்கிருர்கள் என்பதையும் பொறுத்ததாகும். அரசிய லமைப்பின் கீழ்த் தங்களது பொறுப்பையும், கடமையை யும் உணரச் செய்யும் வகையில் மக்களுக்குக் கல்வி புகட்டும் முக்கியமான தேவையை இது நன்ருக விளக்கு கிறது.

மனித நாகரிகம் ஆரம்பமானதிலிருந்து குறிப்பிட்ட கூட்டத்தாரின் ஆட்சி, மன்னராட்சி, சர்வாதிகாரம், ஜன நாயகம் போன்ற அனேக வகையான சர்க்காரைப் பல நாடுகளிலும் பரீட்சித்தும் பார்த்துவிட்டனர். சர்க்கார் முறைகளிலும், பிரஜா உரிமை பற்றிய கருத்துக்களி லும் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படுத்தியது இந்த நூற்ருண்டாகும். ஜனநாயகம் என்பது ஒன்றும்

தெரியாதவர்களின் ஆட்சியென்றும், தீங்கு விளைவிக்கக் கூடிய முறையென்றும் சிலரால் வர்ணித்துக் கண்டனம் செய்யப்படுகிறது. என்னதான் அதில் தவறுகள் இருந்த போதிலும் ஜனநாயகத்திற்கு மாற்ருக வேறெது வும் இல்லை.

பெர்ட்ரண்டு ரஸ்ஸல் கூறியது போல் ஜனநாயக சர்க்காரில் அதன்மேல் சுமத்தப்பட்ட குறைகளும் இருக்க லாம். ஆனல், அதற்கு ஒரு பெரிய தகுதி இருக்கிறது. உள்நாட்டுக் கலகம், அரசியல் குழப்பம் முதலியவற்றைக் கருதும் போது ஜனநாயகமே மேல் என மக்களெல்லோ ரும் பொதுவாக ஏற்றுக்கொள்ளுகின்றனர். ஏனென் ருல் மனித அறிவினுல் இதைவிட ஒரு நல்ல முறை யான சர்க்காரை இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை.

தனிப்பட்டவர்களின் சுதந்திரம் மிகவும் புனித மானது. பிறரால் மீறுவதற்கு உரியதன்று. சாதாரண மனிதனின் க்ஷேமநலத்தைப் பெருக்குவதே அதன் பிரதான நோக்கம் என்று ஜனநாயகம் கருதவில்லை. மற்ற மாதிரியான அரசாங்கங்கள்—குறிப்பாக எதேச்சதிகார வகைகள், பெரும்பாலும் மிருக வெறியை அடிப்படை யாகக் கொண்டவை. தனிப்பட்டவர்களின் உரிமையை யும் சுதந்திரத்தையும் அவை அழிக்கின்றன.

ஜனநாயகத்தின் தத்துவங்களைத் தெளிவாகப்புரிந்து கொண்டு அதைப் பற்றிச் சரியான கொள்கை வைத்துக் கொண்டு, ராஜ்யத்தின் நடைமுறை விஷயங்களில் அவைகளை உறுதியுடன் பிரயோகிப்பதில்தான் நமது அரசியல் அமைப்பின் ஸ்திரத் தன்மை இருக்கிறது. இங்கேதான் அரசியல்வாதிகள் தங்கள் கடமையை நிறை வேற்றவேண்டும். பொதுவாக அரசியல்வாதிகளைத் தந்தி ரமான சந்தர்ப்பவாதிகள் என்று சிலர் அடிக்கடிக் குற்றம் சாட்டுகின்றனர். ஆனல், ஒன்றுமட்டும் நாம் ஞாபகத் தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு உண்மையான

ஜனநாயக நாட்டில், ஜனநாயக அரசியல்வாதி விஞ்ஞானியாகவும், கலைஞனாகவும், வேதாந்தியாகவும் நடைமுறைக் காலத்தின் சந்தியில் நின்றுகொண்டு எதிர் காலத்திற்குள்ள பாதையை வகுத்துக்கொண்டிருக்கிறார். செய்திகளை அறிந்து கொள்வது, உண்மையான நிலைமையை ஆராய்ந்து அறிவது முதலியவற்றோடு நில்லாமல் வேதாந்த வரலாறுகள் விளக்கும் நோக்கத்தின் உயர்வையும், அறிவை அடிப்படையாகக் கொண்ட யூகத்தையும் துணையாகக் கொண்ட அவர், தற்கால லட்சியம் என்ன, இறுதி லட்சியம் என்ன என்பதை முடிவு செய்துகொள்ள வேண்டும். 'ஜனநாயகம் இன்றும்—நாளையும்' – எட்வர்ட் பென்ஸ்.

ஜனநாயகம் நல்ல முறையில் செயல்பட அரசியல் கட்சிகள் அவசியம். ஆனால், கட்சிப் பற்று நமது திருஷ்டியைக் கட்டுப்படுத்துவதோடு சுதந்திரமான அபிப்பிராயங்களையும் கொன்றுவிடுகிறது. ராஜ்யத்தின் க்ஷேம நலத்தையும் கட்சி நலத்தையும் ஒன்றுக்கொன்று மோத விடாமல் சமரசம் செய்ய வேண்டிய பிரச்னைகள் நமக்கு அடிக்கடி ஏற்படுகின்றன.

சுதந்திரம் பெற்றது, சர்வ வோட்டுரிமை அடைந்தது முதலியன இந்தியப் பிரஜைகள் அரசியலில் மிகவும் கவனம் செலுத்தச் செய்துவிட்டன. ஒவ்வொரு பிரஜையும் அவன் சட்டசபை அல்லது அதுபோன்ற பொது ஸ்தாபனங்களில் ஈடுபட்டாலும் அல்லாவிடினும் நாட்டின் விவரங்கள் எப்படி நிர்வகிக்கப்படுகின்றன, ஒவ்வொரு தனி நபருக்கும் என்ன என்ன உரிமைகள் இருக்கின்றன என்றெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிறது. எப்படியும், அரசியல் அமைப்பின் பாகங்களைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது.

இந்தச் சந்தர்ப்பத்தில் பேராசிரியர் இரத்தினசாமியின் எளிய, நுட்பப் பதங்களில்லாத சிறிய புத்தகம் மிக

வும் உதவியாகவிருக்கும். அரசியல் அமைப்பில் முககிய பாகங்களேயும் குறிப்பாக தனிநபர்களின் உரிமையைப் பற்றியும், அவர்களது அடிப்படை உரிமையின் பெருமை பற்றியும் நமது கவனத்தை அவர் கவர்ந்திருக்கிருர். இந்த வெளியீடு இந்தச் சந்தர்ப்பத்திற்கு ஏற்றது. இந்திய அரசியல் அமைப்பில் ஆர்வமுள்ள யாரும் இதை வர வேற்பார்கள் என்று நம்புகிறேன்.




# பொருளடக்கம்

# மக்களும் அரசியல் அமைப்பும்

---

## அரசியல் அமைப்பு என்றால் என்ன ?

எந்தச் சட்டம் இயற்றினாலும், அதற்கு மூலாதாரச் சட்டமாக — தாய்ச் சட்டமாக விளங்குவதுதான் அரசியல் அமைப்பு ; அதாவது, ஒரு நாட்டு மக்களின் அரசாங்கத்திற்கு அடிப்படை. — இவ்வாறு ஸ்டோரி என்னும் மிகச் சிறந்த அமெரிக்க நீதி நிபுணர் குறிப்பிட்டுள்ளார். எட்மண்ட் பர்க் கூறுவதுபோல, மக்களுடைய தேவைகளை நிறைவேற்றுவதற்காக, மக்களின் சிந்தனைவழி உருவாக்கப்படுவதே அரசாங்கமாகும்.

இந்தியாவின் அரசியலமைப்பு இந்திய மக்களின் அரசாங்கத்திற்கு அடிப்படையாகவும், மூலாதாரச் சட்டமாகவும் விளங்குகிறது. அது, இந்திய மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்காக, இந்திய மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய அரசியல் நிர்ணய மன்றத்தினரின் கருத்துவழி உருவாக்கப்பட்டதாகும்.

ஆள்வோரும் ஆளப்படுவோரும் அவரவர் மனம் போன போக்குப்படியெல்லாம் நடந்து கொள்ளாமல், நம்மையும், நமது தனிப்பட்ட அமைப்புகளையும், பொது நிலையங்களையும் சட்டப்படி நிர்வகித்துக் கொள்ளும் சுதந்திர மக்களாக நாம் வாழ வேண்டுமானால், நமது அரசியலமைப்புக்குக் கட்டுப்பட்டு விசுவாசமாக நடந்து கொள்ளவேண்டும் ; அதற்கு ஆதரவு தரவேண்டும் ; கீழ்ப்படிய வேண்டும். அதைக் கௌரவித்து பக்தி

யுடன் போற்றவேண்டும். காரணம் என்ன? ஒருவரோ, சிலரோ, பலரோ கூடிய ஆள்வோரின் தான்தோன்றித் தனமான போக்குப்படி அல்லாமல், நிறுவப்பட்ட சட்டத்தின்படி நமது தனி வாழ்வும், பொது வாழ்வும் நடைபெற, மற்றெல்லா சுதந்திர நாட்டு மக்களின் அரசியலமைப்புகளைப் போலவே, நமது அரசியலமைப்பும் நமக்கு வசதி அளிக்கிறது. ஆள்வோர், ஆளப்படுவோர் ஆகியோரின் உரிமைகளையும் பொறுப்புகளையும் வரையறுக்கிறது; எதேச்சாதிகாரப் பாதையில் ஒருவரிடமோ, சிலரிடமோ, பலரிடமோ அதிகாரம் குவிந்து விடாமல், பல்வேறு அமைப்புகளிடையே அதிகாரத்தைப் பகிர்ந்தளிக்கிறது; இவற்றில் எந்த ஒரு அமைப்பும் அதிக ஆதிக்கம் செலுத்தும் நிலைமை ஏற்பட்டுவிடாதபடி, அவற்றின் அதிகாரங்களை வரையறுத்துக் கட்டுப்படுத்துகிறது; அந்த அமைப்புகளுக்கிடையே இருக்கவேண்டிய உறவை ஒரு ஒழுங்குபடுத்துகிறது; ஒவ்வொருவரும் — மக்களும் அமைப்புகளும் — தங்கள் சுதந்திரத்தை எந்த அளவுக்குப் பயன்படுத்தலாம், எந்த அளவோடு நிற்கவேண்டும் என்பதைத் தெரிவிக்கிறது. இவை எல்லாம் மக்கள் நன்மைக்காகத்தான்.

இனி நமது அரசியலமைப்பின் முக்கிய அம்சங்களை ஆராய்ந்தறியலாம். பிரஜைகளாகிய நமக்கு இது மிகவும் முக்கியம். ஏனென்றால், இந்த அரசியலமைப்புப்படிதான் நாம் ஆளப்படுகிறோம்; நமது பொது விவகாரங்கள் நிர்வகிக்கப்படுகின்றன; நமது சார்பில் நடைபெறும் அரசாங்கம் இயங்குவதற்காக, நாம் செலுத்த வேண்டிய வரிகள் விதிக்கப்பட்டு வசூலிக்கப்படுகின்றன; நமது தனிவாழ்வையும் பொது வாழ்வையும் ஒழுங்குபடுத்தும் சட்டங்கள் இயற்றப்பட்டு அமல் நடத்தப்படுகின்றன. இப்படியாக நமக்கும், நமது அரசியலமைப்புக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுகிறது. ஆகவே அரசாங்க விவகாரங்களைப் பொறுத்த வரையில் நமது நிலை என்ன என்பதைத் தெரிந்து

கொள்ள, அரசியலமைப்பின் தன்மையை அறிந்து கொள்ள வேண்டும். குறைந்த பட்சம் அதிலுள்ள முக்கிய சட்டங்கள், கட்டுப்பாடுகளைப் பற்றியேனும் நாம் தெரிந்துகொள்வது அவசியம். நமது அரசியல் உரிமைகளும் பொறுப்புகளும் யாவை? அரசாங்கம் நம்மை எவ்வளவு தூரம் கட்டுப்படுத்தலாம்? வரையறுக்கப் பட்ட ஒரு சில வழிகளிலும், வழங்கப்பட்ட சாதனங் களைக் கொண்டும் அரசாங்கம் எந்த முறையில் வேலை செய்ய வேண்டியதிருக்கிறது? — என்பனவற்றையும் நாம் அறிந்துகொள்ளவேண்டும். ஏனென்றால், அரசிய லமைப்பு, நம் எல்லோரையும் – மக்களையும் அரசாங் கத்தையும் – கட்டுப்படுத்தும் சட்டம். இதை நினைவில் கொள்வோமாக!

# பீடிகை

எழுத்தோவியங்களாக்கப்பட்டிருக்கும் பெரும் பாலான அரசியலமைப்புகளும் சட்டங்களும் ஒரு பீடிகையுடன் ஆரம்பமாகும். அதுபோலவே இந்திய அரசியலமைப்பும் ஒரு பீடிகையுடன் துவங்குகிறது. ஒரு அரசியலமைப்பு அல்லது சட்டத்தின் முன்னுரை போன்றதுதான் இந்தப் பீடிகை. ஆனல், ஒரு புத்தகத் தின் முன்னுரையைவிட முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு புத்தகத்தின் முன்னுரை, அப்புத்தகம் எம்மாதிரி இருக் கும் என்பதைக் கூறும். ஆனல், ஒரு அரசியலமைப்பு அல்லது சட்டத்தின் பீடிகையோ, அதை உருவாக்கிய வர்களின் (இந்திய அரசியலமைப்பைப் பொறுத்த வரையில் அரசியல் நிர்ணய மன்றத்தினர்) விருப்பத்தை யும் நோக்கத்தையும் பிரதிபலிக்கும். அவர்கள் எந்தக் கொள்கைகளையும் கருத்துக்களையும் அதில் புகுத்த விரும் பினர்கள் என்பதையும், அதன் குறிக்கோளும் பயனும் என்ன என்பதையும் விளக்கிக் காட்டும். ஸ்டோரி என்பவர் கூறுவது போல, "ஒரு சட்டத்தின் பிரிவு களிலுள்ள நல்ல நோக்கங்களை ஏற்றுக்கொள்வதற்கும் கெட்டவைகளை அகற்றுவதற்கும் ஏதுவாக, அந்தச் சட்டத்தை உருவாக்கியவர்களின் இதயத்தைத் திறந்து பார்க்க உதவும் சாவிதான் அச்சட்டத்தின் பீடிகை." இந்தப் பீடிகையின் முக்கியத்துவம், நாகரீக அரசுக்கலை யின் ஆரம்ப காலத்திலேயே உணரப்பட்டது. "ஒரு சட்டத்தின் பீடிகைக்குப் பொருள் இல்லாவிட்டால், அந்தச் சட்டமே பொருளற்றதாகிவிடும்" என்பது, ஆதிகால ரோமன் சட்டக் கோட்பாடுகளில் ஒன்று.

ஒரு சட்டத்தையோ அல்லது அரசியலமைப பையோ ஆராயும்போது, அந்தச் சட்டம் அல்லது அரசியலமைப்பின் பீடிகையை நாம் கருத்தில் கொள்ள

வேண்டும். அப்பொழுதுதான் அதன் முழுவடிவம் அல்லது அதன் பாகங்கள், பகுதிகள், பிரிவுகள் ஆகிய வற்றின் உண்மைப் பொருளை உணரமுடியும். ஆகவே, பீடிகையின் பொருளைத் தெரிந்து புரிந்து கொண்டால் தான், நமது அரசியலமைப்பைத் தெரிந்து புரிந்து கொள்ளமுடியும். இதோ, நமது அரசியலமைப்பின் பீடிகை வருமாறு :—

" இந்தியாவின் மக்களாகிய நாம், இந்தியாவை சுதந்திர ராஜாங்க அந்தஸ்துடன் கூடிய ஜனநாயகக் குடியரசாக அமைத்து, அதன் எல்லாப் பிரஜை களுக்கும்,

" சமூக, பொருளாதார, அரசியல் நீதியும்,

" சிந்தனை, சொல், கொள்கை, மதம், வழிபாடு ஆகியவற்றில் சுதந்திரமும்,

" அந்தஸ்து, வாய்ப்பு ஆகியவற்றில் சமத்து வமும் கிட்டும்படி செய்து,

" எல்லோரிடையேயும் சகோதரத்துவத்தை வளர்த்து, தனி மனித கௌரவத்தையும் நாட்டின் ஐக்கியத்தையும் உறுதிப் படுத்துவதென்று மனப் பூர்வமாக சங்கல்பம் செய்து கொண்டு,

" நமது அரசியல் நிர்ணய மன்றத்தில் 1949-ம் ஆண்டு, நவம்பர் மாதம் 26-ம் தேதியன்று இந்த அரசியலமைப்பை இயற்றி, சட்டமாக்கி நமக்கு நாமே அளித்துக் கொள்கிறோம்."

அரசியலமைப்பின் பிரிவுகளிலும், பகுதிகளிலும் பிரதிபலிக்க வேண்டிய அடிப்படைக் கொள்கைகளையும் நோக்கங்களையும் இந்தப் பீடிகை குறிப்பிடுகிறது.

முதலாவதாக, இந்தியா ஒரு குடியரசு நாடாக அமையும். ஆகவே, அரச பரம்பரையினர் ஆட்சித் தலைமைக்கு வரும் முறைக்கு இடமில்லை. மக்களாலோ, மக்களின் பிரதிநிதிகளாலோ தேர்ந்தெடுக்கப்படுபவர் தான் அரசாங்கத் தலைவராக இருக்க முடியும்.

இரண்டாவதாக, இந்தியா பூரண சுதந்திர ராஜாங்க அந்தஸ்துடன் கூடிய நாடாக விளங்கும். ஆகவே வேறு எந்த நாட்டுக்கும் கட்டுப்படாமல், ஐக்கிய நாடுகள் சபை போன்ற உலக அமைப்புகளிலோ அல்லது மற்ற அரசுகளின் குழுவிலோ அங்கம் வகிப்பது, கூட்டுறவு கொள்வது ஆகிய பிரச்னைகளில் தன் விருப்பத்தையும் வசதியையும் பொறுத்து சுதந்திரமாக நடந்து கொள்ளும்.

மூன்றாவதாக, அரசாங்கம் ஜனநாயக அடிப்படையில் அமையும். ஆபிரஹாம் லிங்கனின் புகழ்பெற்ற பொன் மொழிப்படி, மக்களுக்காக, மக்களால் நடத்தப்படும், மக்களின் அரசாக விளங்கும். சுருங்கக் கூறின் இந்திய அரசாங்கத்தையும், மந்திரிகளையும், சட்ட மன்றங்களையும் மக்கள் நேரடியாகவோ, மறைமுகமாகவோ தேர்ந்தெடுப்பார்கள். அத்துடன் அரசாங்க அமைப்புகள் யாவும் நேரடியாகவோ அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மூலமாகவோ மக்களுக்குப் பொறுப்பு வகிக்கும். இதுதான் இந்நாட்டு அரசாங்கத்தின் பொதுப்படையான தன்மை.

மற்றும், அரசியலமைப்பின் பல்வேறு பிரிவுகளிலும் பகுதிகளிலும் கையாள வேண்டிய பொதுப்படையான கொள்கைகளையும் லட்சியங்களையும் பீடிகை குறிப்பிடுகிறது. அவற்றில் நீதிக்கு முதலிடம் தரப்பட்டுள்ளது. ஒரு அரசுக்கு நீதியைவிட வேறு சிறந்த லட்சியம் இருக்க முடியாது. 'நீதியில்லாத அரசு, கொள்ளைக் கூடாரமாகத்தான் இருக்கும்' என்பது,

ஐரோப்பிய அரசியல் தத்துவ மேதாவி ஒருவரது கருத்தாகும். 'எங்கு உண்மையான நீதி இல்லையோ, அங்கு உரிமைக்கே இடமில்லை'[1] என்று ஆகஸ்டீன் என்னும் பெரியார் கூறியிருக்கிறார். ஒவ்வொருவருக்கும், அவர்கள் பெறுவதற்குரியதை வழங்குவதுதான் நீதி. மக்களிடம் அரசாங்கம் நீதியோடு நடந்து கொள்ள வேண்டும். மக்கள் ஒருவருக்கொருவர் நீதியைப் பரிமாறிக் கொள்வதே, அரசாங்கத்திடம் விசுவாசமாக நடந்து கொள்வதற்கு அடிப்படை. அரசுகள் பரஸ்பரம் நீதியோடு நடந்து கொண்டால்தான் உலக ஒற்றுமை ஏற்படும். இந்த நீதி, இந்தியாவிலுள்ள பல வகுப்பினருக்கு பல நூற்றாண்டுகளாக மறுக்கப்பட்டு வந்தது. இப்போது சுதந்திர நவ இந்தியாவின் அரசாங்க லட்சியங்களில் நீதிக்கு முதலிடம் தந்திருப்பது பெருமகிழ்ச்சிக்குரியதாகும்.

அரசியலமைப்புப்படி, அரசாங்கமும் மக்களும் கைக்கொள்ள வேண்டிய லட்சியங்களில் அடுத்தபடியாக வருவது, சிந்தனை, சொல், கொள்கை, மதம், வழிபாடு ஆகியவற்றில் சுதந்திரம் பற்றியதாகும். சிந்தனை சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம், மத சுதந்திரம் ஆகிய இன்றியமையாத சுதந்திரங்கள் யாவும், எல்லா மக்களுக்கும் கிடைக்க அரசியலமைப்பில் உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், மக்கள் ஒரு ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு நடந்து கொண்டால்தான் உண்மையான சுதந்திரம் நிலவும். அந்த ஒழுங்குடன் சிந்திக்கவும், பேசவும், அதன்படி நடக்கவும் உரிமை படைத்த ஆண்களும் பெண்களும் அடங்கிய சுதந்திர நாடாக இந்தியா விளங்கும்.

அடுத்தபடியாக அந்தஸ்து, வாய்ப்பு ஆகியவற்றில் எல்லோருக்கும் சமத்துவம் கிட்ட உறுதியளிக்கப்பட்டுள்ளது. ஆனால், தரத்திலும் திறமையிலும் யாவரும் சமமாக இருக்கச் செய்வது என்பது இதன் பொரு

ளல்ல. அது அரசாங்கத்தின் சக்திக்கு அப்பாற்பட்டதாகும். ஆகவே சட்டத்தின்முன் யாவரும் சமம். அரசியல், சமூகக் கண்ணோட்டத்தில் எல்லோரும் சமமாக நடத்தப்படுவார்கள். அரசாங்க விவகாரங்களில் யாவருக்கும் சம வாய்ப்பு அளிக்கப்படும்.

இறுதியாக, எல்லோருடைய – குறிப்பாக சமூகக் கட்டுக்கோப்புக்கு வெளியே தாழ்த்தி வைக்கப்பட்டுள்ள மக்களின் தனிமனித கௌரவத்தைப் பாதுகாத்து உயர்த்தி, சாதிப் பாகுபாடுகளை ஒழித்து, மக்களை ஒற்றுமைப்படுத்தி நாட்டின் ஐக்கியத்தை வலுப்படுத்த, யாவரிடையேயும் சகோதரத்துவத்தை வளர்ப்பதற்கு அரசியலமைப்பில் உறுதி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

# அடிப்படை உரிமைகள்

அரசியலமைப்பின் நோக்கத்தையும் தன்மையையும், அதன் பீடிகை குறிப்பிட்டுக் காட்டுகிறது என்பதைப் பார்த்தோம். இனி, இந்தியாவின் அரசியலமைப்பு, அதன் பீடிகை குறிப்பிடும் லட்சியங்களை எப்படி நிறைவேற்றி வைக்கிறது என்பதைப் பார்க்கலாம்.

முதல் பகுதியில் (பிரிவுகள் 1-4) இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டு தனி அரசாக இருக்கும் பாகிஸ்தான், மற்றும் பூடான், சிக்கிம் ஆகிய ராஜ்யங்கள் நீங்கலாக, இந்தியாவின் நிலப்பரப்பு எது என்பது விவரிக்கப்படுகிறது. இரண்டாவது பகுதியில் (பிரிவுகள் 5-11) இந்தியாவின் பிரஜைகளாக இருக்கத் தகுந்தவர்கள் யார் என்பது நிர்ணயிக்கப்படுகிறது. இப்பகுதியின்படி, இந்தியாவில் நிலையாக வாழ்ந்து வருபவர்கள், இந்திய எல்லைக்குள் பிறந்தவர்கள், அல்லது இந்தியாவில் பிறந்த பெற்றோர்களைக் கொண்டவர்கள், மற்றும் இந்திய அரசியலமைப்புச் சட்டம் அமுலுக்கு வரும் (1950 ஜனவரி 26) தேதிக்கு முன் குறைந்தது ஐந்து ஆண்டு காலம் இந்தியாவில் வசித்தவர்கள் ஆகிய அனைவரும் இந்தியப் பிரஜைகளாக மதிக்கப்படுவர்.

அடுத்த பகுதி, அரசியலமைப்பில் காணப்படும் மிக முக்கிய பகுதிகளில் ஒன்று. இப்பகுதி அடிப்படை உரிமைகள் எனப்படும் பிரஜா உரிமைகளைப் பற்றிக் கூறுகிறது.

சுதந்திர நாட்டின் சுதந்திர மக்களாக வாழ வசதியளிக்கும் உரிமைகளைப் பற்றி ஆராயும் இந்தப் பகுதியில், இந்திய மக்கள் அனைவரும் அக்கறை செலுத்த

வேண்டியது அவசியம். இந்த உரிமைகள் அரசியலமைப்பு மூலம் முதல் முறையாக அளிக்கப்பட்டவையல்ல. இவை சுதந்திர மக்களின் இயற்கையான உரிமைகளாகும். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் இந்த உரிமைகள் சாமானிய தர்மம் என்கிற அடிப்படையில் பழக்கத்தில் இருந்தன. சென்னை, கல்கத்தா, பம்பாய் ஆகிய மாகாணத் தலைநகரங்களில் இந்தப் பரம்பரை முறைகள் சட்டமாக மதிக்கப்பட்டன. பிரிட்டிஷ் இந்தியாவின் மற்ற பகுதிகளில் சம்பிரதாயம் என்கிற முறையில் கையாளப்பட்டன. ஆங்கிலேயன் விஷயத்தில் இந்தச் சம்பிரதாயம் சட்ட பூர்வமாகவும் அமல் நடத்தப் பட்டது. ஆங்கிலம் பேசும் நாடுகளில் இந்தப் பிரஜா உரிமைகள், தேசாசார உரிமைகளாகவும், பிற நாடுகளில் சுதந்திர மக்களின் இயற்கையான உரிமைகளாகவும் கையாளப்பட்டன. அந்த உரிமைகள் தான் நமது அரசியலமைப்பில் வகுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, அரசியலமைப்பு மூலம் இந்த உரிமைகளுக்கு உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறதே தவிர புதிதாக வழங்கப்படவில்லை. ஆனல் அரசியலமைப்பில் இந்த உரிமைகளைப் பற்றிய பகுதி முதலிடம் பெறுவதால், அவற்றுக்குரிய முக்கியத்துவம் நன்கு விளங்குகிறது. அத்துடன், இந்த அடிப்படை உரிமைகளுக்கு வலுவளிப்பதே, அரசியலமைப்பிலுள்ள மற்ற பகுதிகளின் நோக்கமாக இருக்கவேண்டும் என்றும் தோன்றுகிறது. அது எப்படியிருப்பினும், இந்திய மக்களை, சுதந்திர நாட்டின் சுதந்திர மக்களாக இருக்கச் செய்வன இந்த உரிமைகள் தான்.

இந்த சுதந்திரத்தை அனுபவிப்பதில் தனி நபர்கள் அல்லது குழுவினரின் ஆதிக்க பலத்தாலோ, அரசாங்கம் மூலமாகவோ, யாருக்கும் எவ்விதத் தீங்கும் ஏற்படாமல் பாதுகாப்பு அளிப்பது அவசியம். அரசாங்க நிர்வாகம், தன் வசமுள்ள ராணுவம், போலீஸ் மூலமாக அளவுக்கு மீறி ஆதிக்கம் செலுத்தினல், அது அந்த அரசுக்கே

விரோதமான நடவடிக்கையாகும். அப்போது பிரஜா உரிமைகளைப் பாதுகாப்பது மிகவும் முக்கியம். தனி நபருக்கும் அரசாங்கத்திற்கும் இருக்கவேண்டிய உறவும், சுதந்திரத்திற்கும் அதிகாரத்திற்கும் இடையே நிலவ வேண்டிய நியாய வரம்பும், அரசுக்கலை அல்லது அரசிய லமைப்புச் சட்டத்தின் மிக முக்கிய அம்சங்களாகும். ஆகவே அரசாங்கத்திடமிருந்து (இந்திய அரசு, மக்கள் சபை, ராஜ்ய அரசுகள், சட்ட சபைகள், மற்ற எல்லா ரக அதிகாரிகள் அடங்கிய அரசாங்கம்) பிரஜைக்கு அளிக்கவேண்டிய பாதுகாப்பு, அடிப்படை உரிமைகளில் முதலிடம் பெறுகிறது. இந்தப் பாதுகாப்பு அளிக்கப் பட்டுள்ள, இந்திய அரசியலமைப்பின் 15-வது பிரிவு கூறுவதாவது: "மதம், இனம், சாதி, ஆண் பெண், பிறப்பிடம் என்ற அடிப்படையில் எந்தப் பிரஜையிட மும் அரசாங்கம் பாரபட்சம் காட்டக்கூடாது. மற்றும் கடைகள், சிற்றுண்டிச்சாலைகள், ஹோட்டல்கள், கேளிக்கைக் கூடங்கள் ஆகிய இடங்களுக்குச் செல்லு வதிலும், சர்க்கார் பொருள் உதவி பெற்ற அல்லது பொதுமக்கள் உபயோகத்துக்கென ஒதுக்கப்பட்ட கிணறுகள், குளங்கள், குளிக்கும் கட்டங்கள், சாலைகள், பொழுது போக்கு நிலையங்கள் ஆகிய இடங்களை உப யோகிப்பதிலும் மேற்கண்ட காரணங்களின் அடிப்படை யில் யாருக்கும் தடை விதிக்கவோ, யாரையும் எவ்விதக் கட்டுப்பாட்டுக்கும் உள்ளாக்கவோ கூடாது." சாதிப் பிரிவினையாலும், மக்களிடையே உயர்வு தாழ்வு மனப் பான்மையாலும், குறிப்பிட்ட ஒரு சில பிரிவினருக்கு இழைக்கப்படும்கொடுமைகளையும்,அநீதிகளையும் இந்தப் பிரிவு குறிப்பிடுகிறது. இது, நவ இந்திய சமுதாய நேர்மைக்குக் கிடைத்திருக்கும் மாபெரும் வெற்றி. சமூக சீர்திருத்தப் பாதையில் வேகமான முன்னேற்றம்.

அடுத்த பிரிவு (பிரிவு 16) அரசாங்க உத்தியோ கங்களைப் பெறுவதில் சாதி, ஆண், பெண் என்ற வேற்றுமையின்றி எல்லா மக்களுக்கும் சம வாய்ப்பு

அளிக்க உறுதி கூறுகிறது. மக்கள், தாங்கள் விரும்பும் தொழில் செய்யவும், வியாபாரம் நடத்தவும், உத்தியோகம் புரியவும் 19-வது பிரிவுப்படி எல்லோருக்கும் உரிமை உண்டு. இந்த பிரிவுப்படி எல்லோருக்கும் பேச்சு, எழுத்து சுதந்திரம் உண்டு. ஆயுதங்களின்றி அமைதியாகக் கூட்டம் கூடவும், கழகங்கள், சங்கங்கள் அமைத்துக் கொள்ளவும், இந்தியா முழுவதிலும் தாராளமாகப் போய் வரவும், இந்தியாவில் எந்த இடத்திலும் வசிக்கவும், நிரந்தரமாகக் குடியேறவும் உரிமை உண்டு. ஆகவே, ஒவ்வொருவரும் தாங்கள் நினைப்பதைச் சொல்லலாம்; பொது வாழ்வில் தாங்கள் அடைய விரும்புவதைச் செய்யலாம். ஆனால், பொது அமைதிக்குப் பங்கம் ஏற்படாத வகையில் நடந்து கொள்ளவேண்டும். பொது ஜன ஒழுங்கு இருந்தால் தான் உண்மையான சுதந்திரம் நிலவ முடியும். இன்றேல் வல்லவன் மட்டுமே சுதந்திரனாக இருப்பான். ஆகவே, பொது நன்மையையும் அமைதியையும் முன்னிட்டு, அவதூறாகவோ, ஆபாசமாகவோ, பிறருக்கு மான நஷ்டம் ஏற்படும் வகையிலோ, அரசாங்கத்தைக் கவிழ்க்கும் ரீதியிலோ பேசுவதையும், எழுதுவதையும் தடுக்கும் சட்ட வரம்புக்கு உட்பட்டே இந்த உரிமையைக் கையாளவேண்டும். 19 (1 ஊ) பிரிவுப்படி சொத்துக்களை வாங்கவும், வைத்திருக்கவும் விற்கவும் எல்லோருக்கும் உரிமை உண்டு. 31-வது பிரிவுப்படி, சட்ட பூர்வமாக அன்றி எவருடைய சொத்தையும் பறிக்கக் கூடாது. இது பொருளாதார சுதந்திரம். ஆனால், சொத்துரிமை அப்பட்டமாக அங்கீகரிக்கப்படவில்லை. ஏனென்றால், பொது நலத்துக்காக தனிப்பட்டோரின் சொத்துக்களை அரசாங்கம் எடுத்துக் கொள்ளலாம். ஆனால், அதற்கு நஷ்ட ஈடு தர ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. 23-வது பிரிவுப்படி நபர்களை விபசாரத்தில் ஈடுபடுத்துவதும், கட்டாய முறையில் வேலை வாங்குவதும் சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாகும். 24-வது பிரிவுப்படி பதினான்கு வயதுக்கு

குறைந்த குழந்தைகளை, தொழிற்சாலைகள், சுரங்கம் மற்றும் அபாயகரமான வேலைகளில் அமர்த்துவது கூடாது.

நீண்ட நெடுங்காலமாக சமூகத்தைப் பீடித்திருக்கும் கொடூர நோய் – தீண்டாமை என்னும் கொடுமை 17-வது பிரிவுப்படி அறவே ஒழிக்கப்பட்டிருக்கிறது. தீண்டாமையை எந்த ரூபத்தில் கையாண்டாலும், அந்தப் பழக்கம் காரணமாக எவ்வித இடையூறு விளைவித்தாலும் அது சட்ட விரோதம். அண்மையில் மத்திய சட்ட மன்றம் நிறைவேற்றியுள்ள சட்டப்படி அபராதம் அல்லது சிறைத் தண்டனை விதிக்கத் தக்க குற்றமாகும்.

மக்களில் தீண்டத்தகாதவர்களைத் தவிர, வேறு பிரிவினரும் உண்டு. அவர்களுடைய உரிமைகளை 'தனி நபர் உரிமைகள்' என்பதைவிட, அந்தந்தப் பிரிவினருக்கே சொந்தமானவை என்பது பொருந்தும். இந்த உரிமைகளுக்கு அரசியலமைப்பில் பாதுகாப்பு அளிக்கப் பட்டுள்ளது. இதன் மூலம் இந்தியாவில் வெறும் தனி நபர்கள் மட்டுமல்ல, வெவ்வேறு சமூகத்தவர்களும் இருக்கிறார்கள் என்பதை அரசியலமைப்பு அங்கீகரிக்கிறது. இந்திய மக்கள் ஒரு மொழி பேசும் ஒரே இனத்தவரல்லர். வெவ்வேறு மொழியினரும், மாறுபட்ட மதத்தினரும், தாழ்த்தப்பட்டோர், மலைசாதியினரைப் போல பல்வேறு வகுப்பினரும், சமுதாயப் பிரிவினருமாக பல்வேறு இனத்தவர்கள் நமது நாட்டில் இருக்கின்றனர். ஆகவே, இப்பேர்ப்பட்ட மக்கள் பிரிவினரின் உரிமைகளைப்பற்றி ஆராயும் எல்லாப் பிரிவுகளும் நமது அரசியலமைப்பில் இடம் பெற்றிருக்கின்றன.

26-வது பிரிவுப்படி மத, தர்ம காரியங்களுக்காக அமைப்புகள் நிறுவி நடத்தவும், தங்கள் மத விவகாரங்களைத் தாங்களே நிர்வகித்துக் கொள்ளவும், ஸ்தாவர, ஜங்கம சொத்துக்களை வாங்கவும், வைத்திருக்கவும்,

சட்டப்படி அந்தச் சொத்துக்களைப் பரிபாலிக்கவும் எல்லா மதத்தினருக்கும் அல்லது அந்த மதத்தின் எந்த ஒரு பிரிவினருக்கும் உரிமை உண்டு.

தங்களுக்கென்று சொந்த மொழி உடைய பிரிவினரின் கல்வி, கலாச்சார உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் 29 (1) பிரிவு கூறுவதாவது : "இந்தியப் பிரதேசத்திலோ, அதன் எந்த ஒரு பகுதியிலோ வசிக்கும் எந்தப் பிரிவினரும், தங்களுக்கென்று தனிப்பட்ட மொழி, எழுத்து, கலாச்சாரம் உடையவர்களாயிருந்தால், அவற்றைப் பேணி வளர்க்க அவர்களுக்கு உரிமை உண்டு."

மதம் அல்லது மொழி அடிப்படையில் சிறுபான்மையினராக இருப்போர், தங்கள் விருப்பப்படி சொந்தக் கல்வி நிலையங்களை நிறுவி நிர்வகிக்க 30-வது பிரிவுப்படி உரிமை உண்டு. அத்தகைய கல்வி நிலையங்களுக்கு நிதி உதவி அளிப்பதில், அரசாங்கம் பாரபட்சம் காட்டக் கூடாது என்று அதே பிரிவின் 2-வது உட் பிரிவு கூறுகிறது.

எல்லோருக்கும் மத சுதந்திரம் உண்டு. இருந்தாலும், பழக்க வழக்கங்கள், தனிப்பட்ட கட்டுப்பாடுகள் காரணமாக, சிறுபான்மை மதத்தினருக்கு மத துவேஷத் தொல்லைகள் ஏற்படாமல் தடுக்கும் வகையில் மத சுதந்திரம் பற்றிய பிரிவு அமைக்கப்பட்டிருக்கிறது. இது, சிறுபான்மையினரின் மத சுதந்திரத்திற்குப் பாதுகாப்பு அரணாக - ஒளி விளக்காகத் திகழ்கிறது. இந்த 29-வது பிரிவுப்படி, பொது அமைதிக்கும், ஒழுக்கத்திற்கும், சுகாதாரத்திற்கும், இந்தப் பகுதியின் மற்ற பிரிவுகளுக்கும் உட்பட்டு, தங்கள் மனச்சாட்சிப்படி நடக்கவும், தங்களுக்கு விருப்பமான மதத்தை தாராளமாக அனுசரிக்கவும், பிரசாரம் செய்யவும் எல்லா மக்களுக்கும் உரிமை உண்டு. இந்த உரிமை

பிரஜைகளுக்கு மட்டுமின்றி, எல்லா மக்களுக்கும் அளிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இதனுல், இந்தியா, மத சுதந்திரமுள்ள மக்கள் நாடாக உலகத்திற்குமுன் தலை நிமிர்ந்து நிற்கிறது.

அரசியலமைப்பில் உரிமைகள் அளித்து விடலாம்; அல்லது அவற்றுக்கு உத்தரவாதம் கொடுத்து விடலாம். ஆனுல், தனி நபரோ, குழுவினரோ, அரசாங்கமோ எவராயினும், மற்றவர்களின் உரிமைகளைப் பறிக்க முற்பட்டால், அதைத் தடுத்து உரிமைகளை நிலை நாட்ட வேண்டும். இல்லாவிட்டால், அவை யாருக்கும் உபயோகமின்றி ஏட்டளவில் நின்று விடும். ஆகவே, அரசியலமைப்பு உத்தரவாதம் செய்யும் உரிமைகளை அமல் நடத்த, 32-வது பிரிவில் சட்ட பூர்வமான வசதி செய்யப்பட்டிருக்கிறது. பாதிக்கப்படுவோர், தங்கள் உரிமைகளை நிலை நாட்டிக்கொள்ள சுப்ரீம் கோர்ட்டை அணுகலாம். அடிப்படை உரிமைகளில் எந்த ஒன்றும் அமலாவதற்குத் தேவையான உத்தரவுகளைப் பிறப்பிக்க சுப்ரீம் கோர்ட்டுக்கு அதிகாரம் உண்டு. (இந்த அதிகாரம் மத்திய சட்டமன்றம் பின்னர் நிறைவேற்றியுள்ள சட்டப்படி எல்லா உயர் நீதி மன்றங்களுக்கும் [ஹைகோர்ட்] உண்டு). சுப்ரீம் கோர்ட் கீழ்க்கண்ட ஆணைகள் - உத்தரவுகள் - கட்டளைகள் பிறப்பிக்கலாம்.

அரசாங்கமோ, அல்லது அரசாங்க அதிகாரிகளோ, ஒருவரை கோர்ட் மூலம் விசாரணை செய்து தண்டனை அளிக்காமல், சட்ட விரோதமாகப் பாதுகாப்பில் வைத்திருந்தால், அவரை உடனடியாக விசாரணைக்குக் கொண்டு வரும்படி கட்டளையிடலாம். இதற்குப் பெயர் (A writ of Hebeas Corpus) கைதியை ஆஜர்படுத்தி விடுதலை செய்யும் உத்தரவு.

அரசாங்க நீதி அல்லது நிர்வாக இலாகா, தன்னுடைய அதிகார வரம்பையும், சட்ட உடன்பாட்டையும்

மீறும் வகையில் நடந்து கொண்டால், அதைத் தடுத்து ஆணையிடலாம். இதற்குத் தடையுத்தரவு (A writ of Prohibition) என்று பெயர். எந்த ஒரு அரசாங்க இலாகாவுக்கும் நேரடியாகப் பிறப்பிக்கப்படுவது 'மாண்டமஸ்' கட்டளை (A writ of Mandamus) எனப்படும்.

அரசாங்கமோ, அரசாங்க அதிகாரிகளோ ஒருவர் மீது நடவடிக்கை எடுத்தால், அதற்குரிய சட்ட பூர்வமான ஆதாரங்களைக் காட்டும்படி (A writ of Quo Warranto - by What Warrant) உத்தரவிடலாம்.

அரசாங்க நீதி அல்லது நிர்வாக இலாகாவினர் போடும் உத்தரவு சட்ட பூர்வமானதா என்பதை ஆராய, அந்த உத்தரவுக்கான நடவடிக்கை தஸ்தாவேஜுகளைக் கோர்ட்டில் சமர்ப்பிக்கும்படி (A writ of Certiorari) கட்டளையிடலாம்.

ஒருவருடைய அடிப்படை உரிமைகளில் ஏதாவது ஒன்று, அரசாங்கத்தாலோ, மற்ற பொது அமைப்பாலோ, தனி நபராலோ பாதிக்கப்பட்டால், மேற்சொன்ன உத்தரவுகள் ஒன்றின் மூலம் தமது உரிமையை நிலை நாட்டிக்கொள்ள கோர்ட்டில் வழக்காடலாம்.

உதாரணமாக, ஒரு போலீஸ் அதிகாரி ஒருவரைக் கைது செய்து கோர்ட்டில் விசாரணைக்குக் கொண்டு வராமல், நியாயமான காலத்திற்கு மேல் பாதுகாப்பில் வைத்திருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அப்போது பாதுகாப்பிலிருக்கும் அவரோ, அல்லது அவர் சார்பில் வேறு யாரோ சுப்ரீம் கோர்ட்டிலோ அல்லது இது விஷயத்தில் அதிகாரம் படைத்துள்ள வேறு நீதி மன்றத்திலோ, 'ஹெபியஸ் கார்பஸ்' மனுச்செய்து கொள்ளலாம். போலீஸார் சட்ட விரோதமாகப் பாதுகாப்பில் வைத்திருப்பதாக கோர்ட் முடிவு செய்தால்,

அவரை விடுதலை செய்யும்படியோ, அல்லது கோர்ட்டில் விசாரணைக்குக் கொண்டு வரும்படியோ உத்தரவிடும். இந்த உத்தரவைப் போலீஸ் அதிகாரி நிறைவேற்றுவார்.

உரிமைகள் அமலாக்கப்பட்டாலொழிய, மக்களுக்கு அவற்றால் உபயோகமில்லை. உரிமைகள் பாதிக்கப் படும்போது, அவற்றுக்கு நிவாரணம் இருக்கவேண்டும். இந்த உண்மையை, ஆதிகால ரோமானியர்கள் நன்கு உணர்ந்திருந்தார்கள். "பரிகாரம் இல்லாவிட்டால் உரிமை எதுவும் இருக்காது" (Ubi jus, Ibi remedium) என்பது அவர்களுடைய கோட்பாடு.

மக்கள் தங்கள் உரிமைகளை நிலை நாட்டிக் கொள்ளப் போதுமான ஏற்பாடுகள் நமது அரசியலமைப்பில் செய்யப்பட்டிருப்பது அதன் பெருமைகளில் ஒன்றாகும்.

# அரசாங்க அமைப்புகள்

**சட்ட மன்றம்**

மக்களுடைய உரிமைகளைப் பாதுகாக்க நீதி மன்றத்தின் கட்டளை (writ) தவிர, வேறு சாதனங்களும் உண்டு. அவற்றில் முக்கியமானவை, மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட சட்ட மன்றங்கள். இந்தியா, அரசியல் ரீதியில் ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இந்த ராஜ்ய சட்ட மன்றங்களின் தலைசிறந்த கடமைகளில் ஒன்று, மக்கள் உரிமைகளைப் பாதுகாப்பதும், அவர்களுடைய நலன்களைப் பேணி வளர்ப்பதுமாகும். தொலைவிலுள்ள டில்லியில் இருக்கும் மத்திய சட்ட மன்றத்தைவிட ராஜ்ய சட்ட மன்றங்கள் மக்களுக்கு அருகில் இருக்கின்றன, ஆகவே, ராஜ்ய சட்ட மன்றத்தை முதலில் எடுத்துக் கொள்வோம்.

**ராஜ்ய சட்ட மன்றம்**

அரசியல் அமைப்புப்படி (பிரிவு 168) ஒவ்வொரு ராஜ்யத்திலும் கவர்னரோடு கூடிய ஒரு சட்டமன்றம் இருக்கவேண்டும். ஆனால், சென்னை, பீகார், பம்பாய், பஞ்சாப், உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய ராஜ்யங்களின் சட்ட மன்றங்களில் இரண்டு சபைகள் இருக்கும். ஒன்று கீழ்ச்சபை ; மற்றொன்று மேல்சபை. கீழ்சபைக்கு 'லெஜிஸ்லேடிவ் அசெம்பிளி' என்றும் மேல்சபைக்கு 'லெஜீஸ்லேடிவ் கவுன்சில்' என்றும் பெயர். மற்ற ராஜ்யங்களில் ஒரே ஒரு சட்டசபை தான் இருக்கும், அதற்கு 'லெஜிஸ்லேடிவ் அசெம்பிளி' என்று பெயர்.

நல்ல சட்டங்களை இயற்றுவதும், பயன்தரும் வகையிலும் சிறந்த முறையிலும் மக்களுக்குப் பிரதி

நிதித்துவம் வகிப்பதுமே சட்ட மன்றத்தின் முக்கிய அலுவல். இந்தக் குறிக்கோள் நிறைவேறும் வகையில் அதன் அமைப்பு இருக்க வேண்டும். போதிய அளவு ஆழ்ந்து யோசித்து, நன்கு விவாதித்து, நிதானத்துடன் சட்டங்களை இயற்றுவது அவசியம், இதற்காக, ஒரு சட்ட மன்றத்தில் இரண்டு சபைகள் இருக்க வேண்டுமென வரலாற்று அனுபவம் தெளிவாக்குகிறது. ஆகவே, இந்தியாவிலுள்ள முக்கிய ராஜ்யங்களின் சட்ட மன்றங்கள் இரண்டு சபைகளைக் கொண்டதாக இருக்கின்றன.

வாக்குரிமை பெற்ற மக்கள் நேரடியாக வாக்களித்துத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக் கொண்டு ஒவ்வொரு ராஜ்ய சட்டசபையும் (அசெம்பிளி) அமைக்கப்படுகிறது, 21-வயதுக்குக் குறையாத இந்திய மக்கள் அனைவரும் வாக்களிக்கத் தகுதி பெற்றவர்கள். ஆனல், அவர்கள் நிலையான வாசமின்மை, புத்திச் சுவாதீனமற்ற தன்மை, கடுங்குற்றம், ஊழல், சட்ட விரோதமான நடவடிக்கைகள்—காரணமாக, அரசியலமைப்புப்படியோ, அல்லது சம்பந்தப்பட்ட சட்ட மன்றத்தின் சட்டப்படியோ தகுதியற்றவர்களாக்கப்படாமல் இருப்பதுடன், ராஜ்ய வாக்காளர் பட்டியலில் பதிவு செய்யப்பட்டவர்களாகவும் இருக்க வேண்டும்.

இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர் ஆகிய அனைவரும் அந்தந்தத் தொகுதிகளில், பொதுத் தொகுதி வாக்காளர்களாகவே பதிவு செய்யப்படுகின்றனர். ஒரு ராஜ்யத்தின் மொத்த மக்கள் தொகையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரும், பின்தங்கிய மலைச்சாதியினரும் எந்த விகிதத்தில் இருக்கிறார்களோ, அதற்குத் தகுந்தபடி, அந்த ராஜ்ய சட்ட சபையிலுள்ள மொத்த ஸ்தானங்களில் அவர்களுக்கென்று தனி ஸ்தானங்கள் (ரிசர்வ்) ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இப்படி உத்தரவாதம் செய்யப்பட்டுள்ள ஸ்தானங்களில், தாழ்த்தப்பட்ட வகுப்

பினரைச் சேர்ந்தவர்கள் மட்டுமே தேர்தலுக்கு நிற்க முடியும், ஆனால், அவர்கள் நிற்கக்கூடிய இடங்களில் அந்தந்தத் தொகுதிகளின் பொதுத் தொகுதி வாக்காளர் களாலேயே தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

எந்த ஒரு ராஜ்ய சட்ட சபையிலாவது ஆங்கிலோ இந்தியருக்குப் பிரதி நிதித்துவம் தேவை என அந்த ராஜ்ய கவர்னர் கருதினால், அவ்வகுப்பைச் சேர்ந்த சிலரை அவர் நியமனம் செய்யலாம்.

ராஜ்ய சட்ட சபையின் உறுப்பினர் தொகை ஐநூறுக்குமேல் இருக்கக் கூடாது; அறுபதுக்கும் குறைய க்கூடாது.

## மேல்சபை (லெஜிஸ்லேடிவ் கவுன்சில்) அமைப்பு

ஒரு ராஜிய மேல் சபையின் அங்கத்தினர் தொகை, அந்த ராஜ்யத்தின் கீழ்ச்சபை அங்கத்தினர் தொகையில் நான்கில் ஒரு பங்காக இருக்க வேண்டும், ஆனால் இந்தத் தொகை எப்படியும் நாற்பதுக்குக் குறையக் கூடாது.

மேல் சபையிலுள்ள மொத்த அங்கத்தினர்களில்;
மூன்றில் ஒரு பங்கினர் :—

ஜில்லாபோர்டுகள், நகரசபைகள், இந்தியப் பார்லி மெண்ட் சட்டத்தின்மூலம் குறிப்பிடும் வேறு ஸ்தல ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் உறுப்பினர்கள் அடங்கிய தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர்.

ஏறத்தாழ பன்னிரண்டில் ஒரு பங்கினர் :—

பல்கலைக்கழகப் பட்டதாரிகளைக்கொண்ட தொகுதி களால் தேர்ந்தெடுக்கப்படுவர். இந்தப்பட்டதாரிகள்

அந்தந்த ராஜ்யவாசிகளாக இருக்கவேண்டும். குறைந்தபட்சம் மூன்று ஆண்டுகளுக்குமுன், இந்தியாவிலுள்ள எந்த ஒரு பல்கலைக்கழகத்திலாவது பட்டம் பெற்றவர்களாக இருக்கவேண்டும். அல்லது, அந்தப்பட்டத்திற்குச் சமமானது எனப் பார்லிமெண்ட் சட்டம் குறிப்பிடும் ஒரு தகுதியை, குறைந்தது மூன்றுண்டு காலமாக வகித்துவரவேண்டும்.

ஏறக்குறையப் பன்னிரண்டில் ஒரு பங்கினர் :—

பார்லிமெண்ட் இயற்றும் சட்டப்படி, உயர்நிலைப் பள்ளியின் (Secondary School) தரத்துக்குக் குறையாத கல்வி நிலையங்களில் குறைந்தது மூன்று ஆண்டுகள் ஆசிரியர்களாக இருந்தவர்களைக்கொண்ட தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர்.

ஏறக்குறைய மூன்றில் ஒரு பங்கினர் :—

ராஜ்ய சட்ட மன்றத்தின் கீழ்ச்சபை(அசெம்பிளி) அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவர். அப்படி தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள் கீழ்ச்சபை உறுப்பினர்களாக இருத்தல் கூடாது.

மீதி அங்கத்தினர்கள், கவர்னரால் நியமனம் செய்யப்படுவர். அப்படி நியமனம் பெறுவோர், இலக்கியம், விஞ்ஞானம், கலை, கூட்டுறவுஇயக்கம், சமூகத் தொண்டு ஆகிய துறைகளில் சிறந்த அறிவோ, அனுபவமோ வாய்ந்தவர்களாக இருக்கவேண்டும்.

**ராஜ்ய சட்ட மன்ற அபேட்சகருக்குரிய தகுதி.**

சட்ட மன்ற அங்கத்தினராக வர விரும்பும் அபேட்சகர் இந்தியப் பிரஜையாக இருக்கவேண்டும். கீழ்ச்சபை அபேட்சகருக்கு இருபத்தைந்து வயதும், மேல்சபை அபேட்சகருக்கு முப்பது வயதும் ஆகியிருக்கவேண்டும்.

**அங்கத்தினராயிருக்கத் தடைகள்.**

கீழ்க்கண்டவர்கள் சட்ட மன்றத்தின் எந்தச் சபையிலும் அங்கத்தினராயிருக்கத் தகுதியற்றவர்கள் :

(1) ராஜ்ய சட்டமன்றத்தால் விதிவிலக்கு அளிக்கப்பட்ட உத்தியோகம் தவிர, மற்றப்படி இந்திய அரசு, அல்லது ராஜ்ய அரசின்கீழ் வருமானமுள்ள உத்தியோகம் வகிப்பவர்கள்.

(2) அதிகாரத் தகுதி படைத்த ஒரு நீதிமன்றத்தால் அறிவிக்கப்பட்டுள்ள புத்தி சுவாதீனமற்றவர்கள்,

(3) கடன் பொறுப்புகளிலிருந்து விடுதலைபெருத 'இன்சால்வென்டுகள்'

(4) அயல்நாட்டுப் பிரஜைகள்.

(5) இந்தியப் பார்லிமென்டு இயற்றிய எந்த ஒரு சட்டப்படியாவது தகுதி இழந்தவர்கள்.

**சட்ட மன்றத்தின் ஆயுட்காலம்.**

172-வது பிரிவுப்படி ஒவ்வொரு ராஜ்ய சட்டசபையும் (அசெம்பிளி) அதன் முதல் கூட்டத்திற்காகக் குறிப்பிடப்படும் தேதியிலிருந்து ஐந்து ஆண்டு காலம் நீடிக்கும். அல்லது அதற்கு முன்பே கவர்னரால் கலைக்கப்படலாம். அப்படி நேராவிடில் குறிப்பிட்ட காலம் முடிந்ததும் கலைக்கப்பட்டதாகக் கருதப்படும்.

ஒரு ராஜ்யத்தின் மேல்சபை (கவுன்சில்) முழுவதும் கலைக்கப்படுவதில்லை. ஆனால், இந்தியப் பார்லிமெண்ட் இயற்றும் சட்ட விதிகளின்படி, இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை, அச்சபை உறுப்பினர்களில் ஏறத்தாழ மூன்றிலொரு பங்கினர் பதவியிலிருந்து விலகவேண்டும்.

**சட்ட மன்றத்தின் அதிகாரங்களும், உரிமைகளும்.**

அவ்வப்போது சட்டபூர்வமாகத் திருத்தி அமைக்கப் படுபவை தவிர, மற்றபடிப் பிரிட்டிஷ் காமன்ஸ் சபைக் குள்ள அதிகாரங்களும், உரிமைகளும் ராஜ்ய சட்ட மன்றங்களுக்கு உண்டு. (பிரிவு 194-3)

அவை வருமாறு:

(1) அரசியலமைப்பில் ஒதுக்கப்பட்டுள்ளபடி, ராஜ்யங்கள் சட்டமியற்றி நிர்வகிக்கக் கூடிய விஷயங் களில், அந்தந்த ராஜ்யங்களுக்கென அரசாங்க நிர் வாகச் சட்டங்கள் இயற்றுதல். எல்லாச் சட்டப் பிரே ரணைகளும் சட்டமன்றத்தின் இரு சபைகளிலும் (அசெம்பிளியும் கவுன்சிலும் உள்ள இடங்களில்) நிறை வேற்றப்பட வேண்டும். பிறகு, அவை கவர்னரின் சம்மதம் பெற்றுச் சட்டங்களாகும்.

(2) நிர்வாகச் செலவுகளுக்கும், அரசாங்கம் மேற்கொள்ளும் பொதுநலத் தொண்டுகளுக்கும் தேவையான பணத்திற்கு அனுமதியளித்தல்.

(3) பொதுநல விஷயங்களைப் பற்றிய தீர்மானங் களை ஆராய்ந்து நிறைவேற்றுதல். இத்தீர்மானங்களின் படி அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம். ஆனல், அப்படி நடக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை.

(4) ராஜ்ய விவகாரங்களில், அரசாங்கத்தின் நிர்வாக நடவடிக்கைகளைக் கண்காணித்து ஒழுங்கு படுத்துதல். இது முக்கியமாக, சட்டமன்றக் கூட்டங் களில் நாள்தோறும், அமைச்சர்களின் நிர்வாகத்திற் குட்பட்ட எந்த ஒரு நடவடிக்கை பற்றியும் அவர் களிடம் கேள்விகள் கேட்பதன் மூலம் நடைபெறுகிறது.

## சட்டமன்ற உறுப்பினர்களின் சிறப்புரிமைகள்

சட்டமன்ற உறுப்பினர்கள், அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுதி மக்களுக்கு மட்டுமின்றி, நாட்டு மக்கள் அனைவருக்கும் பிரதிநிதிகள். ஆகவே, அவர்களுடைய கவனம், பேச்சு, செயல் யாவும் நாட்டு மக்களுக்காகவும், மக்கள் நலனுக்காகவுமே இருக்க வேண்டும். ஆகவே, நாட்டின் பிரதிநிதிகள் என்ற முறையில், தங்கள் கடமைகளைச் சரிவர-திறம்பட நிறைவேற்ற அவர்களுக்கென்று குறிப்பிட்ட சில சிறப்புரிமைகள் வழங்கப்பட்டுள்ளன :
அவைகளாவன :

(1) பேச்சுச் சுதந்திரம்-ஒரு சுதந்திர நாட்டின் சுதந்திர சட்ட மன்றத்தில், எல்லாப் பொது விவகாரங்களைப் பற்றியும் தங்குத் தடையின்றிப் பேச, ஒவ்வொரு உறுப்பினருக்கும் சுதந்திரம் இருக்க வேண்டும். ஆகவே சட்ட மன்றத்தில் ஒரு உறுப்பினர் என்ன பேசினாலும், எப்படி நடந்து கொண்டாலும், அதற்காக அவர்மீது எந்த நீதி மன்றத்திலும் வழக்குத் தொடர முடியாது. அவர் சட்ட மன்றத்தில் சட்டப் பிரேரணைகளைச் சமர்ப்பிக்கலாம்; தீர்மானங்களைக் கொண்டு வரலாம்; பொதுநலக் காரியங்களைப் பற்றிக் கேள்விகள் கேட்கலாம்.

(2) கைதியாகாமல் இருக்கும் சுதந்திரம் :-சட்ட மன்றம் நடைபெறும் காலத்தில், அக்கூட்டங்களுக்குச் செல்லும்போதோ, திரும்பும் வழியிலோ, சட்ட மன்ற உறுப்பினர்களை எந்த அரசாங்க அதிகாரியும் கைது செய்யக்கூடாது. கிரிமினல் குற்றங்களுக்கு இந்தச் 'சுதந்திரம்' செல்லுபடியாகாது.

## சட்டமன்றத்தின் உருவம்—நடைமுறை—அலுவல்கள்.

நன்கு உருவாக்கப்படும் எந்த ஒரு அமைப்பும் வெற்றிபெறும். உண்மையில் ஒரு சட்டமன்றத்தின்

அதிகாரங்களைவிட அதன் அமைப்பு முறை மிக முக்கியம். துவக்கத்தில் ஒரு சில அதிகாரங்களுடன், சிறந்த முறையில் உருவாக்கப்படும் சட்டமன்றம், படிப்படியாகப் புது அதிகாரங்களைத் தன் வசப்படுத்திக் கொள்ளும். இதற்குப், பிரிட்டிஷ் காமன்ஸ் சபையின் வரலாறே சான்ருகும். நன்ருக வளர்ச்சிபெற்ற ஒரு சட்ட மன்றத்திற்கு இருக்கும் எல்லா அதிகாரங்களையும் படைத்துச் சீர்கேடான முறையில் உருவாக்கப்படும் சட்டமன்றம் நாளடைவில் தன் அதிகாரங்களை ஒவ்வொன்ருக இழந்துவிடும். உதாரணமாகப் பிரெஞ்சுப் புரட்சி காலத்துச் சட்ட மன்றங்கள், சீர்கேடான அமைப்பு, ஒழுங்கற்ற நடைமுறை காரணமாக, கடமைகளை நிறைவேற்றத் தவறி விட்டன. அவற்றின் அதிகாரங்கள் நெப்போலியனுல் பறிக்கப்பட்டன.

சட்ட மன்றத்தின் உள் அமைப்பு: ஒரு ஒழுங்குடன், தகுந்த முறையில் திறமையாகச் செயல்படுவதற்காக ராஜ்ய சட்ட மன்றத்திற்கு ஒரு தலைவர் இருக்கிருர். பிரிட்டிஷ்க் காமன்ஸ் சபையின் சம்பிரதாயத்தையொட்டி, கீழ்ச்சபைத் தலைவருக்கு, 'ஸ்பீக்கர்'-சபாநாயகர் என்றும், மேல் சபைத் தலைவருக்கு 'சேர்மன்' என்றும் பெயர். அவர் சட்டமன்றக் கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பார். மன்ற நடவடிக்கைகள் ஒழுங்காகவும், பயன்தரும் வகையிலும் நடைபெறச் செய்வதற்கு வேண்டிய எல்லா அதிகாரங்களும் அவருக்கு உண்டு. உறுப்பினர்கள் அனைவருக்கும் பேச வாய்ப்பு அளிப்பதுடன், சிறுபான்மையினருக்கும், சுயேச்சையாளருக்கும் இந்த வாய்ப்பில் உரிய பங்கு அளிப்பதில் கவனத்துடன் நடந்து கொள்வார். விவாத ஒழுங்கு விதிகளுக்குப் புறம்பாக அங்கத்தினர்கள் நடந்து கொண்டால், அவர்களை ஒழுங்குபடுத்துவார். விவாதத்தில் ஈடுபடும் உறுப்பினர்களிடையே ஏற்றத்தாழ்வு ஏற்பட்டுவிடாமல், எல்லோரிடமும் சம நோக்குடன் நடந்து கொள்வார். சட்டமன்ற அலுவல்களை ஒழுங்குபடுத்தும்

நடைமுறை விதிகளை நிலைநாட்டுவார். இந்த விதிகளைத் தனக்குத்தானே தயாரித்துக் கொள்ள ஒவ்வொரு சபைக்கும் உரிமையுண்டு.

சட்ட மன்றத்தில் நடைமுறை: இது பிரிட்டிஷ் காமன்ஸ் சபையின் நடைமுறையை அடிப்படையாகக் கொண்டது.

கேள்வி நேரம்: அரசாங்கத்தின் அன்றாட நிர்வாகத்தைப்பற்றி அமைச்சர்களிடம் அங்கத்தினர்கள் கேட்கும் கேள்விகளுடனேயே, பெரும்பாலும் சட்ட மன்றக் கூட்டங்கள் துவங்குகின்றன.

தீர்மானங்கள்: ஒரு கேள்வி அல்லது சட்டப் பிரேரணை பற்றி ஆராய்வதற்காக அமைச்சரோ அல்லது சாதாரண உறுப்பினரோ கொண்டு வரும் ஏதாவது ஒரு தீர்மானம் அல்லது பிரேரணையின் அடிப்படையிலேயே சட்ட மன்றத்தில் ஒவ்வொரு விவாதமும் நடைபெற வேண்டும். பொது ஜன முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னைமீது, சபையில் விவாதம் நடத்த வேண்டியிருந்தால், அப்பிரச்னையில் அக்கறையுள்ள அங்கத்தினர், அதுபற்றி விவாதிக்கச் சபை நடவடிக்கைகளை ஒத்தி வைக்கவேண்டுமெனத் தீர்மானம் கொண்டு வருவார். இதைத் தலைவர் அனுமதித்தால், சபை அது குறித்து விவாதம் நடத்தும்.

மசோதாக்கள்: ஒவ்வொரு சட்டப் பிரேரணையும், "மசோதாவின் மூன்று வாசிப்புகள்" என்ற மூன்று கட்டங்களைக் கடந்து செல்லுகிறது.

முதல் வாசிப்பு: உத்தேச உருவிலிருக்கும் மசோதாவை, சட்ட மன்றத்தில், செயலாளரும் அவருடைய உதவியாளர்களும் அமரும் இடத்தில் பூர்வாங்கமாகப் பிரரேபித்தல்.

இரண்டாவது வாசிப்பு: மசோதாவின் அம்சங்களைச் சற்று விரிவாக விவாதிக்கும் கட்டம்.

மூன்ருவது வாசிப்பு: மசோதாவை ஒரு பரிசீலனைக் குழுவுக்கு அனுப்பி, அக்குழு அம்மசோதா பற்றி விரிவாக ஆராய்ந்து தனது கருத்துக்களைச் சட்டமன்றத்திற்குத் தெரிவித்த பிறகோ, அல்லது அப்படி அனுப்பப்படாமலோ, மசோதா கடைசிக் கட்டத்தை அடைகிறது. இதன் இறுதியில் மசோதா சட்டமாக நிறைவேற்றப்படும்; அல்லது நிராகரிக்கப்படும்.

கவர்னரின் அங்கீகாரம்: சட்டமன்றம் நிறைவேற்றிய மசோதாவுக்குக் கவர்னர் அங்கீகாரம் அளித்துப் பிறப்பித்த பிற்குதான் அது சட்டமாகிறது.

பண சம்பந்தமான மசோதாக்களுக்குத் தனி நடைமுறை: பணம்தான் அரசாங்கத்தின் உயிர்நாடி. அரசாங்கம் செலவிடும் பணம் மக்களுடைய பணம். ஆகவே, இது விஷயத்தில் ஒரு தனி நடைமுறை பின்பற்றப்படுகிறது. அந்த நடைமுறையின் முக்கிய அம்சங்களாவன :—

1. அரசாங்கம் மட்டுமே கொண்டு வரலாம்: வரிவிதிப்பு, செலவினப் பிரேரணைகள் அடங்கிய பணம் சம்பந்தப்பட்ட மசோதாக்களை அரசாங்கம் மட்டுமே கொண்டு வரலாம். சட்டமன்றமோ, தனி உறுப்பினரோ கொண்டு வரமுடியாது. செலவைக் குறைக்கும்படிக் கோரலாமேயொழிய, புது வரி ஏதாவது விதிக்கவோ, செலவினம் ஏதையாவது கூட்டவோ பிரேரணை கொண்டு வரக் கூடாது. ஏனென்ருல் வரி வசூலிப்பதும், நிர்வாகத் தேவைகளை நன்கு உணர்ந்து, அதற்குப் பொறுப்பேற்றுக் கொண்டிருப்பதும் அரசாங்கமாகும். ஆகவே, இம்மாதிரிப் பிரேரணைகளைக் கொண்டு வருவதில் அரசாங்கத்திற்கு முழு உரிமை இருக்க வேண்டியது அவசியம்.

கீழ்ச்சபை (அசெம்பிளி) யில் பிரரேபித்தல்: சட்ட மன்றத்தில் இரு சபைகள் உள்ள இடங்களில் பண மசோதாக்களை முதலில் கீழ்ச் சபையில்தான் கொண்டு வர வேண்டும், அதுதான் மக்கள் யாவருக்கும் பிரதிநிதித்துவமுள்ள அமைப்பு. கீழ்ச் சபையில் நிறைவேற்றப்படும் மசோதா மேல் சபையிலும் நிறைவேற வேண்டும். பண சம்பந்தமான பிரேரணைகளில் மேல் சபை ஏதாவது மாறுதல்கள் செய்யலாம். அவற்றைக் கீழ்ச்சபை ஏற்று, மசோதாவில் இணைத்துக் கொண்டாலன்றி, அவற்றிற்கு மதிப்பில்லை.

3. வரிவிதிப்பு, செலவினப் பிரேரணைகள் அடங்கிய நிதி மசோதாவும், அரசாங்கத்தின் அடுத்த ஆண்டிற்கான வரவு செலவு மதிப்பீடுத் திட்டமும் ஒவ்வொரு துண்டும் நிறைவேற்றப்பட வேண்டும். ஆனால், பின் வரும் இனங்களுக்கு ஆகும் செலவுகள் வாக்களிப்புக்கு விடக்கூடியவையல்ல. அவை அரசாங்கத்தின் மொத்த நிதியிலிருந்து (Consolidated Fund) செலவிட வேண்டிய—வாக்களிப்புக்கு விடக்கூடாத—நிரந்தரச் செலவினங்களாகும்.

(1) கவர்னரின் ஊழியம், படி, மற்றும் அன்னாது பதவியும் ஊழியர்களும் சம்பந்தப்பட்ட செலவுகள்.

(2) கீழ்ச்சபைத் தலைவர், துணைத் தலைவர், மேல் சபைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோரின் சம்பளமும் படியும்.

(3) உயர்நீதிமன்ற நீதிபதிகளின் சம்பளமும் படியும்

(4) நீதிமன்றங்கள் அளிக்கும் தீர்ப்புக்கள்படிச் செலுத்த வேண்டிய தொகைகள்.

(5) அரசாங்கம் கொடுக்க வேண்டிய கடன்களுக்கான வட்டி, கடன்களைத் திருப்பிச் செலுத்துதல், மற்றும் கடன்கள் சம்பந்தப்பட்ட இதர செலவுகள்.

(6) ராஜ்யத்தின் மொத்த நிதியிலிருந்து கொடுபட வேண்டியவை என, அரசியலமைப்பிலோ, அல்லது ராஜ்ய சட்ட மன்றத்திலோ நிர்ணயிக்கப் படும் வேறு செலவினங்கள்.

மேற்கண்ட செலவினங்களுக்குச் சட்ட மன்றத்தில் வாக்களிப்புக்கு விடவேண்டிய தேவை இல்லை எனச் சிறப்புச் சலுகை அளிக்கப்பட்டிருப்பதன் நோக்கம் இதுதான். அந்தச் செலவுகளுக்குரிய பதவிகளும் தொண்டுகளும், ராஜ்யத்தின் கௌரவத்தோடு தொடர்புடையவை. அப்பதவிகளுக்கு இருக்க வேண்டிய சுதந்திரமும், ஒருதலைச் சார்பற்ற தன்மையும், இம்மாதிரி சிறப்புச் சலுகை அளிக்கப்பட்டிருப்பதன் மூலம் உறுதி செய்யப்பட்டிருக்கின்றன. மக்களின் சுதந்திர வாழ்வுக்கு இது அவசியமாகும்.

## அமைச்சர் குழுவில் நிர்வாகத்தலைமை

சட்டங்களை நிறைவேற்றவும், அரசாங்கத்திற்குத் தேவையான பண மானியங்கள் அளிக்கவும், ராஜ்ய அரசு கைக்கொள்ள வேண்டிய பொதுவான கொள்கையை வகுக்கவும் அங்கீகரிக்கவும், ராஜ்ய மக்களின் பிரதிநிதித்துவமுடைய சட்ட மன்றத்திற்கு உரிமையும் அதிகாரமும் உண்டு. இருந்தபோதிலும், ராஜ்யத்தின் பாதுகாப்பை உறுதியாக்குவது, அமைதியை நிலை நாட்டுவது, ராஜ்ய வருமானத்தை வசூலிப்பது, கல்வியைப் பரப்புவது, சுகாதாரத்தைப் பேணுவது, சமூக சேவை புரிவது போன்ற அரசாங்க நிர்வாக அலுவல்களை நேர்முகமாகப் பொறுப்பேற்று நிர்வகிப்பது இன்னொரு குழுவாகும். அதுதான் நிர்வாகக்.குழு. அரசிய

லமைப்பின் 154-வது பிரிவுப்படி இந்தக் குழுவின் தலைவராக கவர்னர் நியமிக்கப்படுகிறார். அந்தப் பிரிவு கூறுவதாவது: "ராஜ்யத்தின் நிர்வாக அதிகாரம் கவர்னரிடம் இருந்து வரும். அவர் நேரடியாகவோ, தமக்குக் கீழ்ப்பட்ட அதிகாரிகள் மூலமாகவோ நிர் வாகம் நடத்துவார்,"

கவர்னர் தமது அதிகாரத்தை நடத்துவதற்கு உதவவும், ஆலோசனை கூறவும், முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட ஒரு அமைச்சர் குழு, ஒவ்வொரு ராஜ்யத்திலும் இருக்கிறது. முதலமைச்சர், கவர்னரால் நியமிக்கப்படுகிறார். மற்ற அமைச்சர்களை முதல் அமைச்சரின் ஆலோசனைப்படிக் கவர்னர் நியமிக்கிறார். கவர்னருக்கு விருப்பமான காலம் வரை—அதாவது சட்டசபையின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருக்கும் வரை, அமைச்சர்கள் பதவி வகிப்பார்கள்.

## பொறுப்புவாய்ந்த அமைச்சர் குழு

அரசியலமைப்பின் முக்கியப் பிரிவு ஒன்று (164-2), 'அமைச்சர் குழு, அந்த ராஜ்ய சட்டசபைக்குக் கூட்டுப் பொறுப்பு வாய்ந்ததாக இருக்க வேண்டும்' என்று குறிப்பிடுகிறது. இதன்மூலம், "கூட்டுப் பொறுப்பு"க் கொள்கை, ராஜ்யங்களின் ஆட்சி முறையில் அமலாக்கப்படுகிறது. இந்தக் கொள்கையின்படி, ஒவ்வொரு அமைச்சரும், தமது தனிப் பொறுப்பிலுள்ள குறிப்பிட்ட இலாகாவின் அலுவல்களை நிர்வகிப்பதுடன், தமக்குச் சம்பந்தமில்லாத மற்ற இலாகாக்கள் அனைத்திலும் நடைபெறும் எந்த ஒரு முக்கிய அலுவலுக்கும் மற்றெல்லா அமைச்சர்களுடன் பொறுப்பேற்கிறார். இதனால், அமைச்சர் குழு ஓர் உறுப்பாகவும், பொறுப்பு வாய்ந்ததாகவும் இயங்குகிறது. பொறுப்பு என்றால், யாருக்குப் பொறுப்பு? 164-2 பிரிவுப்படி சட்டசபைக்

குப் (அசெம்பிளி) பொறுப்பு (மேல் சபைக்கு அல்ல). அதாவது சட்டசபையில் பெரும்பான்மையினருக்குப் பொறுப்பாக இருப்பது என்பதே இதன் பொருள். ஏனென்றால், மக்கள் வழி அரசுகளில் தேர்தலிலோ, சட்ட மன்றத்திலோ பெரும்பான்மையினரின் கருத்து வழியே பொது விவகாரங்கள் முடிவு செய்யப்படுகின்றன. ஆகவே, அமைச்சர் குழுவும், சட்ட சபையில் பெரும்பான்மையினருக்குப் பொறுப்பு வாய்ந்ததாக இருக்கிறது. அந்தப் பெரும்பான்மையினர், கடந்த பொதுத் தேர்தலின்படி, பெரும்பான்மை வாக்காளர்களுக்குப் பிரதிநிதித்துவம் வகிக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். இதனால், கவர்னர் தமக்கு விருப்பமானவரை முதலமைச்சராகத் தேர்ந்தெடுப்பதற்கில்லை. சட்ட சபையில் பெரும்பாலோர் உள்ள கட்சி அல்லது குழுவிலிருந்து முதலமைச்சரைத் தேர்ந்தெடுக்க வேண்டியவராகிறார். முதலமைச்சரும் மற்ற அமைச்சர்களைப் பெரும்பான்மைக் கட்சியிலிருந்தே தேர்ந்தெடுக்கிறார். அவர்கள் தம்மோடு பணியாற்றுவதுடன், அவரும் மற்ற அமைச்சர்களும் சட்ட சபைக்குக் கூட்டுப் பொறுப்பு வாய்ந்தவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதே இதற்குக் காரணம். அதாவது, தேர்தல் மூலம் சட்ட சபையில் பெரும்பான்மையினரின் நம்பிக்கைக்கு உரியவர்கள் என்று கவர்னர் திருப்தி அடைந்திருப்பதால்தான், அவர்கள் அமைச்சர்களாகி இருக்கிறார்கள். இந்த நம்பிக்கையை—சட்ட சபையின் பெரும்பான்மையினரின் ஆதரவை—இழந்துவிட்டால் அவர்கள் அமைச்சர்களாக இருக்க முடியாது.

'முதலமைச்சர்' அமைச்சர் குழுவின் தலைவர். அவர் தம் சக அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கிறார். அரசியலமைப்பு மூலம் வழங்கப்பட்டிருக்கும் இந்த உரிமை காரணமாக, நிர்வாக அலுவல்களில் எதையேனும் அல்லது எல்லாவற்றையுமேனும் பகிர்ந்தளிக்கும் உரிமை பெற்றிருக்கிறார். அவர் ஆட்சி

முறைத் தலைமைப் பீடமாக விளங்கும் அமைச்சர் குழுவின் தலைவர்.

இதுவே, 'அமைச்சர் குழுவோடு கூடிய அரசாங்கம்' எனப்படும் நிர்வாகிகள்அரசு இயங்கும் முறை. இது பார்லிமெண்டரி அமைச்சு (பார்லிமெண்டரி நிர்வாக அரசு) என்றும் அழைக்கப்படுகிறது. இதற்கும், நிர்வாகத் தலைவர் அரசுக்கும் சிறிது வேறுபாடு உண்டு. நிர்வாகத் தலைவரைக் கொண்ட ஆட்சிமுறை அமெரிக்காவிலும், அதைப் பின்பற்றி வேறு சில நாடுகளிலும் அமலில் இருக்கிறது. இம்முறைப்படி நிர்வாகத் தலைவரை மக்களே தேர்ந்தெடுக்கிறார்கள். நிர்வாகத் தலைவர், அமைச்சர்களை நியமிக்கிறார். அமைச்சர்கள் தலைவருக்குப் பொறுப்பாக இருக்கிறார்கள். தலைவர் விரும்பினால் அவர்களைப் பதவியிலிருந்து நீக்கிவிடலாம். அமைச்சர்கள் சட்டமன்ற உறுப்பினர்கள் அல்லர்; சட்ட மன்றத்திற்குப் பொறுப்பானவர்களும் அல்லர். பார்லிமெண்டரி அமைச்சு முறையில் உள்ள குறிப்பிடத்தக்க அம்சம், அமைச்சர்கள் சட்டமன்ற உறுப்பினர்களாகவும், சட்டமன்றத்திற்குப் பொறுப்பாகவும் இருப்பதுதான். இந்த முறையினால் பல அனுகூலங்கள் இருப்பதால் பல நாடுகளில் இம்முறையே கையாளப்படுகிறது. அமைச்சர்கள் சட்டமன்ற உறுப்பினர்களாக இருப்பதால், சட்டமன்றத்திற்கும் நிர்வாகிகளுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. இதனால் ஆட்சி செவ்வனே நடைபெற ஏதுவாகிறது. அமைச்சர்கள் பேசித் திருப்திப்படுத்துவதன் மூலம் தாங்கள் கொண்டுவரும் சட்டப் பிரேரணைகளையும், வரிவிதிப்புகளையும் சட்டமன்றம் ஒப்புக்கொள்ளும்படிச் செய்ய வாய்ப்பு இருக்கிறது. அத்துடன் ராஜினாமா செய்வதாகவும், அதன் மூலம் மறு தேர்தல் நடைபெறலாமென்றும், அப்போது வேறு கட்சி பெரும்பான்மைப் பலத்துடன் அதிகாரத்தைக் கைப்பற்றி விடும் அபாயம் நேரலாம் என்றும் அச்சுறுத்தி, தங்கள் பிரே

ரணைகளை ஒப்புக் கொள்ளும்படிச் செய்யவும் வழி இருக்கிறது. சட்டமன்றம் நடைபெறும்போது, தங்கள் கொள்கையையும், நிர்வாக நடவடிக்கைகளைப் பற்றியும் சட்ட மன்றத்திற்கும், அதன் மூலம் பொது மக்களுக்கும் விளக்கிக் கூற முடியும். இன்னொரு பக்கம், மக்களின் பிரதிநிதிகள், பொதுநலக்காரியங்கள் பற்றியும், நிர்வாகம் சம்பந்தமாகவும் மக்களுக்குள்ள குறைகளையும், அவர்களுடைய விருப்பங்களையும் எடுத்துச் சொல்லலாம். நேரடியாகவும், உடனடியாகவும் மக்களைப் பாதிக்கக்கூடிய அதிகாரிகளின் அற்பத்தனமான அக்கிரமங்களையும், இழிவான நிர்வாக நடவடிக்கைகளையும் உறுப்பினர்கள் கண்டித்துத் தடுக்க சட்ட மன்றத்தில் கேள்வி நேரம் பெரிதும் பயன்படுகிறது.

அரசியலமைப்புச் சட்டப்படிக் கவர்னர்தான் நிர்வாகக் குழுவின் தலைவர். அமைச்சர்கள் அவருடைய ஆலோசகர்கள்தான். இருப்பினும் இதே அரசியலமைப்புப்படி, அமைச்சர்கள் சட்ட மன்றத்திற்குப் பொறுப்பாகவும், கவர்னர், பேருக்கு அமைச்சர் குழுவின் தலைவராகவும் இருப்பது குறிப்பிடத்தக்கது. கவர்னர் ஆலோசனை கூறலாம்; எச்சரிக்கை செய்யலாம்; திருப்தி படுத்த முயற்சிக்கலாம். ஆனால், இறுதி முடிவு செய்வதை அமைச்சர்களிடம் விட்டுவிட வேண்டும். ஏனென்றால் அமைச்சர்கள்தான் சட்ட மன்,றத்திற்கும், மக்களுக்கும் பொறுப்பானவர்கள்; கவர்னர் அல்லர். கவர்னர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரல்லர். ஜனாதிபதியால் நியமிக்கப்பட்டவரே. சட்ட மன்றம் கூடியிருக்காத காலத்தில் அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கக் கவர்னருக்கு அரசியலமைப்புப்படி அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. இது ஏன்? சட்ட மன்றம் குறிப்பிட்ட காலங்களில்தான் கூடுகிறது. ஆண்டுக்கு இரண்டு தடவைகளுக்குக் குறையாமலும், அமைச்சர்களின் கருத்துப்படிப் பொது விவகாரங்களின் அவசியத்தை முன்னிட்டு அடிக்கடியும் சட்ட மன்றம் நடைபெறுகிறது.

நெருக்கடி நேரங்களில், அவசர நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியத்தால், கவர்னர் இம்மாதிரி அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கிறார். இம்மாதிரி அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கக் கவர்னருக்குச் சிறப்பு அதிகாரம் இருந்தபோதிலும், இந்த அதிகாரத்தை அமைச்சர்களின் சார்பிலேயே அமல் நடத்துகிறார்.

## அமைச்சர் குழுவும் ஆட்சியும்

ராஜ்யத்தின் தலைமை ஆட்சிபீடத்தில் அமர்ந்திருப்பது அமைச்சர் குழுதான். இருப்பினும், நிர்வாக இயந்திரம் முழுவதும் அவர்களோடு மட்டுமில்லை. அவர்கள் ஒருசிலர்தான். மிகப்பெரிய ராஜ்யங்களில்கூட பதினைந்து பேர்களுக்குமேல் இல்லை. எனவே, சட்டமன்றம் நிறைவேற்றும் சட்டங்களை அமுல் நடத்துவது, அசெம்பிளி அனுமதிக்கும் வரிகளை வசூலிப்பது, ராஜ்யத்தில் சட்டம், அமைதியைப் பாதுகாப்பது, கல்வி, மற்றும் சமூகத் தொண்டு ஏற்பாடுகளை நிறுவிப் பராமரிப்பது போன்ற எல்லா அலுவல்களையும் அமைச்சர்களே முன்னின்று செய்துவிட முடியாது. அவற்றைச் செய்யத் திரளான அதிகாரிகள் வேண்டும். இவர்களே நிர்வாகம் அல்லது நிர்வாக சேவைகளாக அமைகிறார்கள். தலைநகரிலுள்ள அரசாங்கத் தலைமைச் செயலகத்தில், அமைச்சர்களுக்கு ஆலோசனைகள் கூறுவது, தகவல்கள் அளிப்பது, வழிவகுத்துத் தருவது போன்ற அலுவல்களைக் கவனிப்பதற்காக, ரெவினியூ, போலீஸ், கல்வி, சுகாதாரம், விவசாயம், தொழில்கள் போன்ற பல்வேறு இலாகாக்களில் பணிபுரியும் தலைமை அதிகாரிகள் உட்பட எல்லா அதிகாரிகள் முதல், மாவட்டங்களிலுள்ள கலெக்டர், போலீஸ் தலைமை அதிகாரி, மாவட்டக் கல்வி அதிகாரி, மாவட்டப் பதிவாளர் ஆகியோருக்குக்கீழே கிராமாதிகாரி, கர்ணம் வரையிலுள்ள அத்தனை பேரும் நிர்வாக அமைப்பைச் சேர்ந்தவர்களே. அமைச்சர் குழு, நிர்வாகத்தின் தலை என்றால்,

இலாகா வாரியாகப் பணிபுரியும் இந்த அதிகாரிகள், அரசாங்கத்தின் கைகள், கால்கள், மற்ற அவயவங் களைப் போன்றவர்கள். சட்டம் அமைதியைப் பாது காப்பது, வரி வசூலிப்பது, கல்வி, சுகாதாரம், விவசா யம், தொழில்கள் ஆகிய துறைகளில் அரசாங்கம் செய்ய வேண்டிய தொண்டுகள் புரிவது ஆகிய அலுவல் களை யெல்லாம், அமைச்சர் குழுவின் உத்தரவுப்படி யும், மேற்பார்வையிலும் நடத்திவைப்பது உண்மையில் இந்த அதிகாரிகள்தான். அரசாங்கத்தின் இன்றி யமையாத இந்தப் பணிகளெல்லாம், திறமையாகவும், செம்மையாகவும், தொடர்ந்தும் நடைபெற, இவர்கள் அனைவரும் நிலையான அதிகாரிகளாக இருக்க வேண்டி யது அவசியம். ஆனல், அமைச்சர்களோ அப்படியல்ல. அவர்களுடைய பதவிக் காலம் தேர்தலில் தங்கள் தலை விதியையும், முதலமைச்சரின் நன்மதிப்பையும் பொறுத் திருக்கிறது. முதலமைச்சரோ, சட்டமன்றத்தின் பெரும் பான்மை உறுப்பினர்களின் விருப்பத்தையொட்டி பதவி யிலிருப்பவர். ஆனல், அதிகாரிகளுக்கு, தங்கள் உத்தி யோகம் நிரந்தரமுள்ளதாக இருக்கவேண்டும். அவர் கள் போதுமான அளவு ஊதியம் பெற்ருல்தான், தங்க்ள் திறமையளவு ராஜ்யத்திற்குச் சேவை செய்ய முடியும். அத்துடன் எல்லாரக (அரசியல், சமூக) செல் வாக்குகளுக்கும் அப்பாற்பட்டவர்களாகவும் இருக்க வேண்டும். இன்றேல் தங்கள் கடமையிலிருந்து தவற ஏதுவாகும். இத்தகைய நிர்வாகத்தையும், நிர்வாக சேவைகளையும் அமைத்துப் பராமரிக்க வசதி செய்து தருவதில் அரசியலமைப்பு தவறிவிடக் கூடாது.

## உத்தியோக நியமனக் கமிஷன்

அரசியல் அமைப்பின் 309-வது பிரிவுப்படி அமைச்சர் குழு, தன் விருப்பப்படி நடக்காமலிருக்க அரசாங்க உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுத்து அவர் கள் வேலை, ஊதியம், ஓய்வு முதலியவற்றை ஒழுங்கு

படுத்த ராஜ்ய சட்ட மன்றங்கள் சட்டங்கள் செய்ய லாம். மேலும் 310-வது ஷரத்தின்படி நிரந்தர (தற்கா லிகமல்லாத) உத்தியோகஸ்தர்கள் சேவை செய்யும் காலம், ராஜ்யத்தின் கவர்னர் அல்லது ராஜப்பிரமுக ரின் இஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது; இது இந்தியா வில் சேர்த்து அமைத்துக் கொண்ட ஆங்கிலப் பழக்க முறைப்படி உத்தியோகஸ்தர்கள் நன்னடத்தையுடன் சேவை செய்கிறவரையில் என்று பொருள்படும். உத்தி யோகஸ்தர்களின் உத்தியோகம் உறுதியாக ஆவதற்கு இச்சட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. அவர்களை நிய மித்த உத்தியோகஸ்தருக்குக் கீழ்ப்பட்ட எந்த உத்தி யோகஸ்தராலும் அவர்களை வேலையிலிருந்து தள்ளவோ, நீக்கவோ முடியாது, என்பதை இது கூறுகிறது. நிர்வாக உத்யோகஸ்தர்கள் அரசியல் அதிகாரத்திற் குள், முக்கியமாக ஒரு கட்சியின் அதிகாரத்திற்குள், போகாமல் இருக்கவேண்டும். இதற்கு உத்தியோகஸ் தர்களைத் தேர்ந்தெடுக்கும் சுதந்தரக் கமிஷன் அவசியம். ராஜ்ய நிர்வாக உத்தியோகஸ்தர்களையும் தனிப்பட்ட உத்தியோகஸ்தர்களையும் தேர்ந்தெடுக்கும் முறைகள், அவர்களை முதலில் வேலைக்கு அமர்த்தும் விதிகள், ஒரு பதவியிலிருந்து மற்றொரு பதவிக்கு மாற்றுதல் அல்லது உயர்த்துதல், அப்போது அப்பதவிக்கு அவர்களின் தகுதி, ராஜ்ய உத்தியோகஸ்தர்களின் மீது ஒழுங்கு பற்றிய விஷயங்கள் - அவை சம்பந்தமான விண்ணப் பங்கள், மனுக்கள் உட்பட உத்தியோக முறையில் நேர்ந்த வழக்குகள், நிர்வாகத்தில் பெரும்பான்மையான உத்தியோகங்கள் கமிஷனின் அதிகாரத்துக்குட்பட்டன. ஆயினும் சில வகையான உத்தியோகங்கள் அவற்றின் தனிப்பட்ட இயல்புகளால் கமிஷனின் அதிகாரத்துக்குப் புறம்பாக நியமனம் பெற இடமுண்டு. தற்காலிகமான உத்தியோகங்களும் இராணுவத்தை ஒத்த கீழ்த்தர போலீஸ் உத்தியோகங்களும் இவ்வகையைச் சாரும். ராஜ்ய உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுக்கும் கமி ஷன் சுதந்தரம் பெற்றதாக இருக்கவேண்டும். ஆகை

யால் அரசியல் அமைப்பில் 316-வது ஷரத்துப்படிக் கமிஷனின் தலைவர் உட்பட எல்லா அங்கத்தினர்களை யும் ராஜ்ய கவர்னர் அல்லது ராஜப்பிரமுகரே நியம னம் செய்யலாம். மேலும் 317-வது ஷரத்தின்படி பின் கண்ட காரணங்களுக்கன்றி வேறு காரணத்தால் அவர்களை வேலையினின்று நீக்கமுடியாது. இந்தியாவின் உச்ச நீதிமன்றத்தின் யோசனையினாலும், திவால் ஆனார் என்று தீர்ப்பளிக்கப்பட்டாலும், பதவிக்காலத்தில் அப் பதவியின் கடமைகளுக்குப் புறம்பாக ஊதியமுள்ள எவ்வித வேலையிலாவது ஈடுபட்டாலும், மனத்தின் அல்லது உடலின் தளர்ச்சியின் காரணமாகத் தொடர்ந்து பதவியிலிருந்துவரத் தகுதியற்றவர் என ராஷ்டிரபதி அபிப்பிராயப்பட்டாலும், தலைவரையோ அங்கத்தினரையோ பதவியிலிருந்து நீக்கிவிடலாம். மேலும் அவ்வங்கத்தினரும் தலைவரும் தாம் ஏற்றிருந்த பதவிக்கு வேறான கமிஷனில் பதவியேற்கலாமே ஒழிய மற்றெந்த அரசாங்க உத்தியோகத்துக்கும் அருகர் ஆகார்.

## நீதி இலாகா

ராஜ்யங்களில் சட்டம் இயற்றும் அதிகாரத்தை யும் நிர்வாக அதிகாரத்தையும் கவனித்தோம்; சுதந்தி ரம் பெற்ற ஏதேனும் ஒரு நாட்டின் மற்ற அதிகாரங் களுக்குக் கட்டுப்படாத சுயேச்சையான நீதி பரிபால னத்தைக் குறித்து இப்போது ஆராய்வோம். அரசியல் அமைப்பு (214-வது ஷரத்து) ஒவ்வொரு ராஜ்யத்திற் கும் ஒவ்வொரு உயர்நீதி மன்றம் இருக்கவேண்டும் என்று கூறுகிறது. "ஒவ்வொரு உயர்நீதி மன்றமும் பதிவு செய்யும் ஒரு நீதி மன்றமாகும். (அதாவது அதன் நடவடிக்கைகள் பதிவுசெய்யப்பட்டு சாட்சியாகக் கூறப்படலாம்). மேலும் அது தன்னை (அதன் கௌரவம், நடவடிக்கைகள், செயல்களைக் குறித்து) அவமதித்

ததற்காக தண்டிக்கும் அதிகாரம் உடையதாகும்'' என 215-வது ஷரத்து கூறுகிறது,

ராஜ்யத்தினுள் நீதி காரணமாக ஏற்படும் எல்லா வழக்குகளேயும் குறித்துத் தீர்ப்புக்கூற உயர்நீதி மன்றங்களுக்கு அதிகாரமுண்டு. சென்னே போன்ற சில ராஜ்ய உயர்நீதி மன்றங்களுக்கு முதல் தரப்பு வழக்குகளேயும் (சென்னேயில் முதன்முறை ஏற்படும் வழக்குகள்) அப்பீல் வழக்குகளேயும் (கீழ் நீதி மன்றங்களிலிருந்து மறு விசாரணைக்கு வரும் வழக்குகள்) விசாரிக்க அதிகாரம் உண்டு. அடிப்படையான மக்கள் உரிமைகளே நிலேநிறுத்த ஹேபியஸ் கார்ப்பஸ், மாண்டேமஸ் ப்ரொஹிபிஷன், கோவாரண்டோ, ஸெர்ஷியோரேரை போன்ற தாக்கீதுகளேப் பிறப்பிக்க இவ்விராஜ்ய உயர் நீதி மன்றங்களுக்கு அதிகாரம் உண்டு. மேலும் மாவட்ட நீதிமன்றம், அதற்குக் கீழுள்ள நீதிமன்றங்கள் ஆகியவற்றின் அலுவலகங்களின் நிர்வாகத்தை மேற்பார்வையிட உயர்நீதி மன்றங்களுக்கு அதிகாரம் உண்டு. 217-வது ஷரத்தின் இரண்டாவது பிரிவின்படி உயர் நீதி மன்றத்தின் நீதிபதிகளின் சுதந்திரம் உறுதியாக்கப்பட்டிருக்கிறது. தீய நடத்தையுடையவரெனவோ திறமையில்லாதவரெனவோ நிரூபிக்கப்பட்டால் ராஷ்டிரபதியின் உத்திரவுப்படி ஓர் உயர்நீதி மன்ற நீதிபதியை வேலேயிலிருந்து நீக்கலாம். அவ்வாறு நீக்குவதற்கும் பார்லிமெண்டுச் சபை கூடும் ஒரே முறையில் ஒவ்வொன்றிலும் அச்சபையின் பெரும்பான்மையோராலும், அங்கத்தினர்களில் வந்திருந்து ஓட்டுக் கொடுப்போர்களில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத, பெரும்பான்மையோராலும் ஆதரிக்கப்பட்ட ஒரு விண்ணப்பம் ராஷ்டிரபதியிடம் சமர்ப்பிக்கப்படவேண்டும். இந்த ஒரு நிபந்தனேயன்றி வேறு எந்த வழியிலும் உயர் மன்ற நீதிபதியை 65 வயது வரை பதயிலிருந்து நீக்க இயலாது. ஆனல் அவரை ஓர் உயர் நீதி மன்றத்திலிருந்து மற்ருேர் நீதிமன்றத்திற்கு மாற்ற

லாம். ஆயினும் அவர் ஊதியத்தை அவருக்குப் பாதகமாகக் குறைக்க முடியாது. அன்றியும் உத்தியோக முறையில் அவர் செய்யும் செயல்களின் மீதோ அவர் கூறும் மொழிகளின் மீதோ எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ள முடியாது.

தனிப் பிரஜைகள் மீது மட்டுமேயன்றி அரசாங்க உத்தியோகஸ்தர்களுடைய செயல்களின் மீதும் அதிகாரம் செலுத்திச் சட்ட ஆட்சி நிலவ நீதி இலாகாக்கள் காரணமாகின்றன. ஆகவே மக்களின் உரிமைகளையும் சுதந்தரங்களையும் பாதுகாக்கும் உண்மையான வலிய அரணாக நீதி இலாகாக்கள் அமைகின்றன. சட்ட ஆட்சிக்கு உயிர்நாடியாகக் கூறப்படும் தங்கள் சுதந்திரத்தை நம் நீதி இலாகாக்கள் பெற்று நடைமுறையில் நிலைநாட்டி வருகின்றன. நாட்டின் எந்தச் சட்டசபையிலும் செய்யப்பட்ட சட்டம் எல்லாச் சட்டங்களுக்கும் அடிப்படையான அரசியல் அமைப்புச் சட்டத்திற்கும் ஒத்ததாக உள்ளதா என்பதை நிர்ணயிக்கும், அதிகார உச்ச நீதி மன்றத்திற்கு அளிக்கப்பட்டிருப்பதைப் பின்னர்க் காண்போம். மக்களின் சுதந்தரங்களைக் குன்றெனப் பாதுகாத்து நிற்பது நீதி இலாகாக்களே ஆகும்.

# மத்திய அரசாங்கம்

**ராஷ்டிரபதி :**

இந்தியாவின் அரசாங்கத் தலைவர் இந்தியாவின் ராஷ்டிரபதியே யாவர். 53-வது ஷரத்தின் முதல் பிரிவின் படி இந்திய அரசாங்கத்தின் நிர்வாக அதிகாரம் அவரிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அந்த அதிகாரத்தை அவர் நேரிலும் அவருக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்கள் மூலமாகவும் செலுத்தலாம். மேலும் நாட்டின் பாதுகாப்புப் படைகளின் தலைமைச் சேனாதிபத்தியமும் அவரிடத்திலேயே அளிக்கப்பட்டிருக்கிறது. பார்லிமெண்டின் இரு சபைகளிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள், இராஜ்யங்களின் கீழ்ச்சபைகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் ஆகியோரால் ராஷ்டிரபதி தேர்தெடுக்கப்படுவார். இராஜ்யங்கள் நிலப் பரப்பிலும் மக்கள் தொகையிலும் பெரியன சிறயனவாக இருப்பதால் கூடியவரையில் ஒரே அளவான பிரதிநிதித்துவம் அமையுமாறு ராஷ்டிரபதி தேர்தல் அமைக்கப்பட்டிருக்கிறது. தேர்தலில் சிறுபான்மையோருக்கும் வசதி அளிக்கப்பட்டிருக்கிறது. மாற்றக்கூடிய தனி வாக்குரிமையைச் சமமாக அளிக்கும் பிரதிநிதித்துவத்தின் மூலம் தேர்தல் நடக்கும் :- அதாவது தேர்தலுக்கு நிற்கும் அபேட்சகர்களை வாக்காளர்கள் தம் விருப்பத்தின் அளவுக்கேற்ற வரிசையில் குறிப்பிடுவார்கள்.

தேர்தல் உத்தியோகஸ்தர்கள் பலமுறை கணக்கிட்டு வாக்காளர்களின் அதிக விருப்பத்தைப் பெற்றவர் எவரோ அவரை ராஷ்டிரபதியாகத் தேர்ந்தெடுப்பார்கள். ராஷ்டிரபதி ஐந்தாண்டு காலம் பதவிவகிப்

பார். சாவினலோ அல்லது ராஜீனமாவாலோ மத்திய சட்டசபை வாக்கெடுத்துத் தள்ள நேர்ந்ததனலோ அப் பதவி குறிப்பிட்ட ஐந்தாண்டுக்கு முன்னர் முடிவடைய லாம். இந்தியாவின் பிரஜையாகவும் குறைந்தது முப்பத்தைந்து வயதாவது உடையவராகவும் பார்லி மெண்டு சபைக்குத் தேர்ந்தெடுக்கும் தகுதியுடையவரா கவும் இருக்க வேண்டு என்பதுமே ஒருவர் ராஷ்டிரபதி பதவிக்கு அபேட்சகராக இருப்பதற்கு வேண்டிய தகுதி கள் ஆகும். அவர் மேல்சபை, கீழ்ச்சபைகளின் அங்கத் தினர் அல்லராயினும் அவர் அச்சபைகளைச் சார்ந்தவ ராகவே கருதப்படுவார். மத்திய சட்டசபை செய்யும் சட்டங்கள் ராஷ்டிரபதியின் சம்மதம் பெற்றே பிரகட னம் செய்யலாம், மேலும் இராஜ்ய சட்டசபைகளில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களுள் முக்கியமுள்ளவையும், விவாதத்திற்குரியனவாகவும் உள்ள சிலவற்றைக் கவர் னர் ஒதுக்கிவைப்பார். இவைகளையும் ராஷ்டிரபதி யின் சம்மதம் பெற்றே நடைமுறைச் சட்டமாகப் பிரகட னம் செய்யலாம். எந்தக் குற்றத்திற்காவது நீதிமன்றத் தண்டனைகள் பெற்றவர் எவருக்கும் மன்னிப்பு வழங்க லாம்; தண்டனை ஆரம்ப காலத்தைத் தள்ளிப்போட லாம்; இடைக்காலத்தில் அத்தண்டனையை நிறுத்தி வைக்கச் செய்யலாம், குறைக்கலாம், எளிய தண் டனையாக மாற்றலாம். நிர்வாக வர்க்கத்தின் தலைவர் என்ற முறையில் மத்திய அரசாங்கத்தின் உச்ச நிர்வா கத்தின் அமைப்பு அவருடைய பொறுப்பில் உள்ளது. பிரதம மந்திரியை நியமிக்கும் உரிமை ராஷ்டிரபதிக்கு உண்டு. ஆயினும் மக்கள் சபையில் பெரும்பான்மை யோர் வாக்கைப் பெற்றவரையே அவர் தெர்ந்தெடுக்க வேண்டும். நம் நாட்டுப் பொறுப்பாட்சியின் கீழ் அவர் எல்லா விஷயங்களிலும் மந்திரிகளின் யோசனையின் படியே நடக்கவேண்டும். மந்திரிகள் யோசனைகளுக்குச் சம்மதப்படா விட்டால் ராஷ்டிரபதி தம் பதவியை ராஜீநாமா செய்துவிடவேண்டும். ராஷ்டிரபதியினது ஆடம்பரமான சடங்குகள் அவசியம் பெற்றவை. இங்கி

லாந்து தேசத்து மன்னர் அல்லது அரசி போன்று தேசத்தின் பிரதிநிதியாக அவர் திகழ்கின்ருர். மக்க ளது சமூக வாழ்க்கையின் தலைவராகவும் வழிகாட்டியா கவும் விளங்குகின்ருர்.

பார்லிமெண்டின் மேல் கீழாகிய இரண்டு சட்ட சபைகளும் ஒன்ருகக் கூடி பெரும்பான்மையோராகிய அங்கத்தினர்கள் உப-ராஷ்டிரபதியைத்தேர்ந்தெடுப்பார் கள். மாற்றக்கூடிய தனி வாக்குப் பதிவிஞல் விகித முறைப்படி அவர் தேர்தல் நடக்கும். ராஷ்டிரபதி பதவி சாவிஞலோ ராஜிநாமா செய்வதஞலோ தற்காலிகமாகக் காலி ஆகலாம். அப்போது அடுத்த ராஷ்டிரபதி தேர்ந் தெடுக்கும் வரை உப-ராஷ்டிபதியே ராஷ்டிரபதி அலு வல்களைக் கவனித்து வருவார். அக்காலங்களில் ராஷ் டிரபதியின் எல்லாப் பாதுகாப்புக்களையும் அதிகாரங் களையும் உப-ராஷ்டிரபதி பெற்றவராவர். சாதாரண மாக அவர் மேல் சபையின் தலைவராவர். உப-ராஷ்டிர பதி பதவி ஏற்ற நாள் முதல் ஐந்தாண்டு காலம் அப் பதவியிலிருக்கத் தகுதி உடையவர்.

## அமைச்சர் குழு

இந்திய அரசாங்கத்தின் நிர்வாக அதிகாரங்களை அமல் நடத்துவதில், ஜஞதிபதிக்கு ஆலோசனை கூறி உதவ, ஒரு அமைச்சர் குழு இருப்பது அவசியம், அக் குழுவுக்கு பிரதம மந்திரியே தலைவர். பிரதமரை ஜஞதி பதி நியமிப்பார். மற்றவர்களைப் பிரதம மந்திரியின் யோசனையின் பேரில் அவரே நியமிப்பார். மந்திரிகள் ராஷ்டிரபதியின் விருப்பம் உள்ளவரை பதவி வகிக்க லாம். அவ்விருப்பமும் மந்திரிக் குழுவினர்களுக்குப் பார்லிமெண்டில் உள்ள பலத்தைப் பொறுத்தது. ஏனெ னில் மந்திரிக் குழுவினர் மக்கள் சபைக்குக் கூட்டுப் பொறுப்பு உள்ளவராக இருக்கின்றனர். முன்பு விளக் கியபடி மத்திய அரசாங்க மந்திரிகளும் பொறுப்பாட்சி

யின் தத்துவங்களுக்கும் நடைமுறைப் பழக்கங்களுக்கும் ஏற்றவாறு நடந்துகொள்வார்கள்.

## இந்தியாவின் பிரதம வழக்கறிஞர்

பிரதம வழக்கறிஞரை ராஷ்டிரபதி நியமிப்பார். இவர் ராஷ்டிரபதியின் விருப்ப காலம் வரையில் பதவி வகிக்கலாம். ராஷ்டிரபதி நிர்ணயிக்கும் ஊதியம் இவர் பெறலாம். இவரது கடமைகள் பின்வருமாறு :- இந்திய அரசாங்க உத்தியோகப் பதவி பெற்ற பிரதம வழக்கறிஞர் சட்ட சம்பந்தமான விஷயங்களை குறித்து அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறவேண்டும். ராஷ்டிரபதி சட்ட சம்பந்தமான கடமைகளைக் கொடுக்கலாம்; ஆலோசனைகள் கேட்கலாம். பிரதம வழக்கறிஞர் அவைகளை முடித்துத் தருதல் வேண்டும். அரசியலமைப்பினுலும் அதன் கீழுள்ள மற்றச் சட்டத்தினுலும் ஏற்படும் அலுவல்களைச் செய்வது அவருடைய கடமையாகும். மத்திய அரசாங்கம் வாதியாக வேனும் அல்லது பிரதிவாதியாகவேனும் எந்த நீதிமன்றத்திலாயினும் வாதாட நேரலாம்; அப்போது அவர் அரசாங்கத்தின் பிரதிநிதியாக இருந்து வாதாடவேண்டும்.

## மத்திய அல்லது தேசீயச் சட்டசபைகள்

பார்லிமெண்டு என்ற ஒரு தேசீயச் சட்டசபை இருக்கவேண்டும் என்று 79-வது ஷரத்து கூறுகிறது. அதன்படி ராஷ்டிரபதி உள்பட்ட மக்கள் சபை, ராஜ்யப் பரிஷத்து என்ற இரண்டு சபைகளும் அப்பார்லிமெண்டு ஆகும்.

### மக்கள் சபை

மக்களது பிரதிநிதிகள் அடங்கியது மக்கள்சபை. 81வது ஷரத்தின்படி 500க்கு மேற்படாத எண்ணிக்கை

உள்ள அங்கத்தினர்களைக் கொண்டது இது. பதிவு செய்த தகுதியுள்ள வாக்காளர்களே பற்பல ராஜ்யங்களில் இந்த அங்கத்தினர்களை நேரடியாகத் தேர்ந்தெடுப்பார்கள். மக்கட் சபைக்கு ஏற்படும் தேர்தல் பிரதேசங்களுக்காக ஒவ்வொரு இராஜ்யத்தையும் பிரிக்கலாம்; பலவற்றோடு ஒன்று சேர்க்கலாம்; தனிப் பிரதேசமாக அமைக்கலாம். இத்தகைய பிரதேசங்களுக்குப் பிரித்துக் கொடுக்கும் அங்கத்தினர்கள் ஜனத் தொகையில் 500,000 பேர்களுக்கு ஒரு பிரதிநிதிக்கு மேற்படாமல் இருக்கவேண்டும். மக்கள்சபை முதல் கூட்டத்திலிருந்து 5 ஆண்டு காலமே நீடித்திருக்கலாம்; அதற்கு இடையிலும் ராஷ்டிரபதியின் உத்திரவின்பேரில் இது கலைக்கப்படலாம். ஐந்தாண்டுக்கு மேல் மக்கள் சபை இருத்தலாகாது. சபை கலைந்தாக வேண்டும்.

## இராஜ்யப் பரிஷத்து (மேல்சபை)

மக்கள் பிரதிநிதிகள் உள்ளது மக்கள் சபை. இராஜ்யங்களுக்கென்றே பிரதிநிதிகள் கொண்டது இராஜ்யப் பரிஷத்து. அரசியலமைப்பின் 80 ஆவது ஷரத்துப்படி அச்சபை பின்வருமாறு அமையும்.

1. இலக்கியம், விஞ்ஞானம், கலை, சமூகச் சேவை ஆகியவற்றில் விசேஷ அறிவும் அனுபவமும் பெற்றவர்களில் 12 பேர்களை ராஷ்டிரபதி நியமிப்பார்.

2. 238 பேர்களுக்கு மேற்படாத இராஜ்யப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். அந்தந்த இராஜ்ய சட்டசபையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களால் விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறைப்படி ஒற்றை மாற்று ஓட்டு மூலமாக இராஜ்யப் பரிஷத்தின் மற்றப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

## பார்லிமெண்டு அங்கத்தினரின் பதவிக்குரிய தகுதிகள்

ஒருவர் இந்தியாவின் குடியாக இருக்கவேண்டும்; மக்கள் சபைக்கு 25 வயதுக்கு மேற்பட்டவராக இருக்க வேண்டும்; இராஜ்யப் பரிஷத்துக்கு 30 வயதுக்கு மேற்பட்டவராக இருக்கவேண்டும். இவைகளே அவர் பார்லிமெண்டில் பிரதிநிதியாக இருப்பதற்கு வேண்டிய தகுதிகள்.

84-வது ஷரத்தில் பார்லிமெண்டு வேறு தகுதிகளையும் விதிக்கும் சட்டம் செய்யலாம் எனக் கூறுகிறது. ஆயினும் உண்மையில் வேறு எவ்விதத் தகுதிகளும் விதிக்கவில்லை. எனவே பார்லிமெண்டின் பெருமைக்குத் தகுதியுடையவர்களாகவும் உபயோகமுள்ளவர்களாகவும் இருப்பவர்களை அரசியல் கட்சிகள் நியமிக்க வேண்டியது அவசியமாகிறது.

## பார்லிமெண்டு அங்கத்தினர்களின் தகுதி இன்மைகள்

அங்கத்தினர்கள் பின்வரும் காரணங்களால் தகுதியற்றவர்கள் ஆவர்.

1. இந்திய, இராஜ்ய அரசாங்கங்களில் லாபம் தரும் பதவியை வகித்தல் (பார்லிமெண்டு சட்டத்தின் மூலம் இதன் கீழ் நீக்கிய பதவிகள் நீங்கலாக)

2. சித்த விகாரப்பட்டவராகவும், அப்படிப்பட்டவர் என்று தக்க நீதிமன்றம் ஒன்றினால் அறிவிக்கப்பட்டவராகவும் இருத்தல்.

3. திவாலாகி விடுதலை பெறுதவராயிருத்தல்.

4. இந்தியக் குடியாக இல்லாமை, அல்லது அந்நிய ராஜ்யத்தின் குடிமையைத்தானே விரும்பிப் பெறுதல்.

## பார்லிமெண்டின் கூட்டங்களும் நடைபெறும் காலமும்

அரசியல் அமைப்பின் 85 ஆவது ஷரத்தின்படி பார்லிமெண்டு ஒரு வருஷத்தில் இரண்டு முறையாவது கூடவேண்டும். கூட்டம் நடைபெறும் காலங்களுக்கிடையே உள்ள காலம் ஆறு மாதத்திற்கு மேற்படக் கூடாது. எனினும் மேல், கீழ்ச்சபைகளில் இரண்டையுமோ அல்லது ஒன்றையோ ராஷ்டிரபதி அவசியம் என நினைக்கும்போது கூட்டலாம். பொதுத் தேர்தலுக்குப் பிறகு கூடும் முதல் கூட்டத்திலிருந்து ஐந்து ஆண்டு முடிவடைந்ததும் மக்கள் சபை கலைக்கப்படும். ஆனால் மந்திரிக் குழுவின் ஆலோசனையின் பேரில் ராஷ்டிரபதி அதற்குமுன்னும் கலைத்துவிடலாம். இராஜ்ய பரிஷத்தோ முழுவதும் கலைக்கப்படுவதில்லை. ஆனால் அதன் அங்கத்தினர்களில் மூன்றில் ஒருபங்கு (கூடியவரையில்) இரண்டு இரண்டு ஆண்டுகள் முடிவடைந்ததும் விலகிக்கொள்ள வேண்டும். இதற்கு நடைமுறையில் பார்லிமெண்டு தக்க ஏற்பாடுகள் செய்துள்ளது.

## மத்திய சட்டசபைகளின் அதிகாரம்

பார்லிமெண்டின் ஒவ்வொரு சபை, அதன் அங்கத்தினர் ஆகியோரின் அதிகாரங்களும் சுதந்திரங்களும் பார்லிமெண்டினால் அவ்வப்போது சட்டபூர்வமாக நிர்ணயிக்கப்படும். அதுவரையில் ஆங்கில மக்கட்சபையின் அதிகாரங்களையும் சுதந்திரங்களையும் இந்தியப் பார்லிமெண்டு அங்கத்தினர் பெற்று வருவர். அவைகளில் முக்கியமானவை :-

1. அரசியல் அமைப்பின் கீழ், சில விஷயங்கள் மத்திய அரசாங்கத்தினிடம் ஒப்படைக்கப்பட்டு இருக்கின்றன. அவ்விஷயங்கள் குறித்து இந்தியப் பிரதேசம் முழுமைக்கும் சட்டங்கள் செய்யலாம்.

2. சில கோட்பாடுகளையும் திட்டங்களையும் அரசாங்கத்திற்குச் சிபாரிசு செய்து தீர்மானங்கள் நிறைவேற்றலாம். இந்தச் சிபாரிசுகளின்படி அரசாங்கம் நடக்கலாம். நடக்காமல் இருந்தாலும் இருக்கலாம்.

3. பலவித இலாகாக்கள் நிர்வாகத்துக்காகவும் அவைகள் மக்களுக்குக் கொடுக்கும் சேவைக்காகவும் பணம் வசூலித்துச் செலவுசெய்ய அனுமதி அளிக்கலாம். வரிகள் வசூலித்துச் செலவு செய்யவும் திட்டங்கள் எல்லாம் அரசாங்கத்தாரே செய்யவேண்டும். பொதுவாகச் சட்டசபையோ அல்லது ஒரு தனிப்பட்ட அங்கத்தினரோ இவற்றை ஆரம்பித்துவைக்கக்கூடாது. வருஷாந்திர வரவு செலவுகள் அந்தந்த வருஷம் சட்டசபைகளில் சம்மதம் பெறவேண்டும்.

சில செலவுப் புள்ளிகள் பார்லிமெண்டின் சம்மதம் பெற வேண்டியதில்லை. அவைகள் நிரந்தரமானவை. அரசாங்த்தின் வருவாய்களிலிருந்து (அதாவது இந்திய சஞ்சித நிதியிலிருந்து) கொடுக்கப்பட வேண்டியவை. அவையாவன ;

(அ) ராஷ்டிரபதியின் சம்பளம், படிகள் அப்பதவியினாலேற்படும் மற்றச் செலவுகள்

(ஆ) ராஜ்யப் பரிஷத்தின் அக்கிராசனர், உப-அக்கிராசனர், மக்கள் சபையின் சபாநாயகர் உப-நாயகர் இவர்கள் சம்பளங்கள், படிகள்

(இ) இந்திய அரசாங்கம் பொறுப்பாளியாக உள்ள கடன் செலவுகள், அதனால் ஏற்படும் வட்டி, கடன் தீர்ப்புச்செலவுகள் முதலியன,

(ஈ) உயர்நீதி மன்றத்து நீதிபதிகளின் சம்பளம், படி, ஓய்வுச் சம்பளம்

(உ) இராஜ்ய உயர்நீதி மன்ற நீதிபதிகளின் ஓய்வுச் சம்பளம்

(ஊ) இந்தியாவின் மாபெருங் கணக்கர் பரிசோதகருக்குக் கொடுக்கவேண்டிய சம்பளங்கள், படிகள்

(எ) நீதிமன்றங்களின் தீர்ப்புக்களை நிறைவேற்ற வேண்டுவதற்கு அவசியமான தொகைகள்

(ஐ) இந்திய அரசியலமைப்பு அல்லது பார்லிமெண்டு சஞ்சித நிதியிலிருந்து செய்ய வேண்டியவை என்று அறிவிக்கப்பட்ட மற்றச் செலவுகள்.

இராஜ்ய நிதி விவரணத்தில் சில செலவுகள் சட்ட சபைகளின் சம்மதம் பெறவேண்டியதில்லை. அப்படியே மத்திய நிதி விவரத்திலும் மேற்கண்ட செலவுகள் பார்லிமெண்டின் சம்மதம் பெறவேண்டியதில்லை.

அச்செலவுகள் நிரந்தரமானவை; அவசியமானவையும்கூட. எனவே சட்ட மன்றங்களின் வருஷாந்திரம் மாறக்கூடிய சம்மதத்தைப் பெறவேண்டும் என்பது நியாயம் ஆகாது.

4. பார்லிமெண்டு அரசாங்கத்தினது நாட்டு நிர்வாகத்தின் மீது தடையும் கட்டுப்பாடும் செலுத்துகிறது. மேல்சபையிலும் கீழ்ச் சபையிலும் கேள்வி நேரத்தின்போது நிர்வாகத்தில் ஏற்படும் தனிச் செயல்களை விசாரணை செய்கிறது.

5. மந்திரிக் குழுவின் பொதுக் கோட்பாடுகளும் நிர்வாகமும் தனக்குப் பிடித்தவரையில் அதை ஆதரித்துச் சாதக வாக்களித்துப் பதவியில் நிலைநிறுத்துகிறது. முக்கியமாக கோட்பாடு, நிர்வாகமுறை இவை

களில் மாறுபாடு ஏற்பட்டால் சாதக வாக்கை அளிக்க மறுத்து ஆதரிக்காமல் மந்திரிக்குழுவை நீக்கிவிடலாம்.

6. மத்திய சட்டசபை ஒவ்வொன்றும் தம் தம் நடைமுறைகளையும் காரியங்களையும் தமது நிலைத்த உத்தரவுகளினுலும் தீர்மானங்களினுலும் இராஜ்ய சட்சபைகள் போல ஒழுங்குபடுத்திக் கொள்ளும் அதிகாரம் உண்டு,

## சட்டமியற்ற ராஷ்டிரபதிக்குள்ள விசேஷ அதிகாரம்

சாதாரணமாக, பார்லிமெண்டுதான் மத்திய அரசாங்கத்தின் சட்டங்கள் இயற்றுதற்கு மூலமாக உள்ளது. ஆயினும் ராஷ்டிரபதிக்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் அரசியல் அமைப்பின் 123 ஆவது ஷரத்தின் படி அளிக்கப்பட்டுள்ளது. பார்லிமெண்டின் சபைகள் நடைபெருத காலத்தில், ராஷ்டிரபதி அவசரச் சட்டங்களைப் பிரகடனம் செய்யலாம். ஆனல், அப்போது அச் சட்டம் அவசியமானது என்றும், உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டுள்ளது என்றும் ராஷ்டிரபதிக்கு விளக்கமாகத் தெரியவேண்டும். இப்படிப்பட்ட அவசரச் சட்டங்கள் மற்றப் பார்லிமெண்டு செய்த சட்டங்களின் சக்தி வாய்ந்தவை. ஆனல் சபைகள் கூட்டினவுடன் இச்சட்டங்கள் அங்குக் கொண்டு வரப்படவேண்டும். மறுபடியும் பார்லிமெண்டு சபை கூடிய ஆறு வாரங்களுக்குப் பின் அந்த அவசரச் சட்டங்கள் தம் சக்தியை இழந்துவிடும். அதற்கு முன்னும் பார்லிமெண்டு சபைகள் இரண்டும் பாதகமான தீர்மானங்கள் மூலம் அந்த அவசரச் சட்டங்களை அமுலற்றுப் போகச் செய்யலாம்.

# மத்திய நீதி இலாகா-உச்ச நீதி மன்றம்

நாட்டின நீதி பரிபாலன நிர்வாகத்தின் சிகரமாக அமைவது உச்சநீதி மன்றமாகும். இராஜ்யங்களில் உள்ள உயர் நீதிமன்றங்கள் போலவே உச்சநீதி மன்றமும் 129-வது ஷரத்தின்படி பதிவு செய்யும் ஒரு நீதி மன்றமாகும். (அதாவது அதன் நடவடிக்கைகள் பதிவு செய்யப்பட்டுச் சாட்சியாகக் கூறப்படலாம்; சட்டங்களை மீறியவர்கள் மீது வழக்குத் தொடர்ந்து தண்டிக்கலாம்) நீதிமன்றங்களை அவமதித்ததற்காகவும் உச்சநீதிமன்றம் தண்டிக்கும் அதிகாரம் பெற்றது. மத்திய அரசாங்கத்திற்கும் ஒரு இராஜ்ய அரசாங்கம் அல்லது பலஅரசாங்கங்களுக்கும் இடையிலேயோ, அல்லது மத்திய அரசாங்கத்திற்கும் எல்லா இராஜ்ய அரசாங்கங்களுக்கும் இடையிலோ, அல்லது ஒரு இராஜ்ய அரசாங்கத்திற்கும்-மற்றொரு அல்லது பல பல இராஜ்ய அரசாங்கங்களுக்குமிடையிலேயோ ஏற்படும் வழக்குகளை முதன் முறையிலே விசாரிக்கும் அதிகாரம் உச்ச நீதிமன்றத்திற்கு உண்டு. இவ்வழக்குகள் சட்டம், உண்மை ஆகியவற்றை நிலைநிறுத்துதலில் ஏற்படுகின்றவையாக இருக்க வேண்டும்.

இந்திய அரசாங்கத்திற்கும் மற்ற இராஜ்ய அரசாங்கங்களுக்கும் இடையே உள்ள சில வழக்குகள் உச்ச நீதிமன்றத்தின் அதிகாரத்திற்குப் புறம்பானவையாக ஒதுக்கப்பட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்திற்கும் இந்திய இராஜ்யங்கள் என்று வழங்கப்படும் இராஜ்யங்ளுக்கும் இடையே கொண்ட சம்பந்தங்கள், ஒப்பந்தங்கள், தொடர்புகள், சன்னதுகள் மற்ற ஏற்பாடுகள் போன்றவைகளை நிறைவேற்றுமையி

ஞல் ஏற்படும் வழக்குகள் உச்சநீதி மன்றத்தின் அதிகாரத்துக்குட்படா.

மேலும், உச்ச நீதிமன்றம் ஒரு அப்பீல் நீதிமன்றமும் ஆகும். இராஜ்ய உயர் நீதிமன்றங்கள் சிவில், கிரிமினல், மற்ற வழக்குகளில் கூறும் தீர்ப்பு, கட்டளை உத்தரவுகளின் மேல் மறு விசாரணை செய்யும் அதிகாரம் உச்ச நீதிமன்றத்திற்கு உண்டு; ஆனல் அந்தந்த ராஜ்ய நீதி மன்றங்கள், அரசியலமைப்பின் சட்டசம்பந்தமான பெரும் பிரச்னைகள் அவ்வழக்கில் உள்ளன என அவ்வழக்குகளுக்கு அத்தாட்சி கூறவேண்டும். அப்படி அத்தாட்சி கூரு விட்டாலும் உச்ச நீதிமன்றம் அவை அத்தகைய வழக்குகள் எனத் தெரிந்தால் அப்பீலில் விசாரிக்கலாம்.

பின்வரும் அப்பீல் வழக்குகளை உச்ச நீதிமன்றம் விசாரிக்கலாம் :-

1. 20,000 ரூபாய்க்குக் கீழ்ப்படாத தொகை பற்றிய சிவில் வழக்குகள்.

2. கீழ்நீதிமன்றத்தில் விடுதலைபெற்ற ஒருவருக்கு உயர் நீதிமன்றம் மரண தண்டனை அளித்த வழக்குகள்.

3. உயர் நீதி மன்றத்துக்குக் கீழ் உள்ள நீதி மன்றத்திலிருந்து விசாரணை முடியுமுன் உயர் நீதி மன்றங்களே அவற்றை எடுத்துக்கொண்டு குற்றம் சாட்டப்பட்டவர் மீது மரண தண்டனை விதித்த வழக்குகள்.

4. உச்ச நீதிமன்றத்தின் விசாரணைக்குத் தகுதி வாய்ந்தவை என உயர் நீதிமன்றங்கள் நிர்ணயித்த வழக்குகள்.

இவற்றிற்கு மேலாகவும் கீழ் நீதிமன்றங்கள், நீதி விசாரணைக் குழுக்கள் பிறப்பித்த தீர்ப்பு, முடிவு, தண்டனை, கட்டளைகளுக்கு எதிராக, தனக்கு சரியெனத் தோன்றும் அப்பீல் வழக்குகளை, விசாரிக்க உச்ச நீதி மன்றம் பிரத்தியேக உத்தரவு போடலாம்.

உச்ச நீதிமன்றத்துக்குத்தான் முதலில் செய்த தீர்ப்பு, உத்தரவுகளை மாற்றவும், பரிசீலனை செய்யவும் அதிகாரம் உண்டு. ஹேபியஸ் கார்ப்பஸ், மண்டமஸ், ப்ரொஹிபிஷன், கோவாரண்டோ, ஸெர்ஷியாரி போன்ற தடை உத்தரவுகளை மக்களது அடிப்படையான உரிமைகளுக்கு வேருன இடங்களிலும் பிறப்பிக்க, பார்லிமெண்டு உச்ச நீதிமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கலாம். மேலும் பார்லிமெண்டு புது அதிகாரங்களைக் கொடுக்கலாம்; புது சக்திகளையும் வழங்கலாம்.

அரசியல் அமைப்பின் 141, 142-ஆம் ஷரத்துக்களின்படி உச்ச நீதிமன்றம் வெளியிட்ட சட்டம் மற்றெல்லா நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்தும்; உச்ச நீதி மன்றத்தின் தீர்ப்புக்கள், முடிவுகள், கட்டளைகள் எல்லாம் இந்தியப் பிரதேசம் முழுமையும் நிறைவேற்றத் தக்கவை. அது எந்த மனிதரையும் தன் முன் ஆஜராகக் கட்டளையிடவும், அப்படி ஆஜராகச் செய்யவும் சக்தி வாய்ந்தது. எந்தப் பத்திரத்தையும் தன் முன் சமர்ப்பிக்கும்படி உத்தரவிட்டுச் சமர்ப்பிக்கச் செய்யும் சக்தியும் வாய்ந்தது. தன்னை அவமதித்ததை விசாரித்துத் தண்டனை விதிக்கும் அதிகாரமும் உச்ச நீதிமன்றத்திற்கு உண்டு.

## உச்ச நீதிமன்றத்தின் விசேஷமான பணி

சில சமயங்களில் சட்டம் அல்லது நியாயம் பற்றிய பிரச்னை ஏற்படலாம்; அல்லது ஏற்படுவதற்குக் காரணங்கள் இருக்கலாம். அத்தகைய விஷயத்தின் சிறப்

பிலும், பொதுநல முக்கியத்திலும் உச்ச நீதிமன்றத்தின் ஆலோசனை பெறுவது நலமாகத் தோன்றலாம். அக்காலங்களில் ராஷ்டிரபதி உச்ச நீதிமன்றத்தை யோசனை கேட்கலாமென்ற உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது; ஆனல் இத்தகைய ஆலோசனைகள் பெறுவதனல் உச்ச நீதிமன்றத்தின் சுயேச்சையும் நடுவுநிலைமையும் பாதிக்கப்படலாம். தனிப்பட்ட சட்டம், நியாயம் பற்றிய வழக்குகள் தன் முன் வரும்போது தனது அபிப்பிராயங்களை புனராலோசனை செய்ய நேரிடலாம் அல்லவா? அதிர்ஷ்டவசமாக இத்தகைய சந்தர்ப்பங்களில் ராஷ்டிரபதி கேட்கும்போது உச்ச நீதிமன்றம் தன் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கலாம் (தெரிவிக்க வேண்டும் என்றல்ல) என அரசியலமைப்புச் சட்டம் ஜாக்கிரதையுடன் கூறுகிறது. ஆனல் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும், முன்னைய இந்திய இராஜ்யங்களுக்கும் இடையே உள்ள பழைய உடன்படிக்கைகள், ஏற்பாடுகள் போன்றவைகளைக் குறித்த வழக்குகள் உச்ச நீதிமன்றத்தின் விசாரணைக்கும் தீர்ப்புக்கும் வரமாட்டா; இத்தகைய விஷயங்களைக் குறித்து ராஷ்டிரபதி கேட்கும்போது உச்ச நீதிமன்றம் தன் அபிப்பிராயத்தைத் தெரிவித்தாக வேண்டுமென அரசியலமைப்பு விதிக்கிறது.

நீதிமன்றத்தின் நிர்வாக அதிகாரம் சுயேச்சையாக நடைபெறவேண்டும்; எனவே உச்ச நீதிமன்றத்தின் நீதிபதிகளின் சம்பளம், படி, உத்தியோக ஸ்தலத்தின் செலவுகள் ஆகியவை எல்லாம் இந்திய சஞ்சித நிதியிலிருந்து கொடுக்குமாறு அரசிலமைப்பு ஏற்பாடு செய்துள்ளது. ஆண்டுதோறும் சட்ட மன்றங்களால் அனுமதிக்கும் நிதி விவரணத்தின் கீழ் இச்செலவுகள் வருவதில்லை.

உச்ச நீதிமன்றம் ஒரு தலைமை நீதிபதியும், பல உதவி நீதிபதிகளும் கொண்டது. பார்லிமெண்டு மாற்றுகிறவரையில்,நீதிபதிகளின் எண்ணிக்கை ஏழுக்கு

மேற்படக்கூடாது. தலைமை நீதிபதியையும், ராஷ்டிரபதி தேவை எனக் கருதுகிற மற்ற உச்ச நீதிமன்ற நீதிபதிகளையும், இராஜ்ய தலைமை நீதிபதிகளையும் ஆலோசித்து ராஷ்டிரபதி உச்ச நீதிமன்ற நீதிபதிகளை நியமிப்பார். இந்த நீதிபதிகள் 65 வயது வரையில் பதவி வகிப்பார்கள். உச்ச நீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்படுபவர் இந்தியப் பிரஜையாக இருக்கவேண்டும்; ஒன்று அல்லது பல உயர் நீதிமன்றங்களின் நீதிபதியாக தொடர்ந்தாற்போல 5 வருஷம் பதவி வகித்திருக்க வேண்டும்; அல்லது ஒன்று அல்லது பல நீதிமன்றங்களில் தொடர்ந்து பத்து வருஷ காலம் நியாயவாதியாக இருந்திருக்கவேண்டும்; அல்லது ராஷ்டிரபதியின் அபிப்பிராயத்தில் சிறந்த சட்ட நிபுணர் என விளங்க வேண்டும்.

நீதிபதியின் சம்பளம், படி முதலியவைகளைச் சட்டமன்றங்களின் கட்டுப்பாட்டுக்குப் புறம்பாக அமைத்து, அவரது சுயேச்சை பாதிக்கப்படாமல் அரசியலமைப்பு செய்திருக்கிறது. மேலும் அவரை விலக்கக்கூடிய உத்தரவு போடக்கூடியவர் ராஷ்டிரபதியே யாவர்; அதற்கு முன் பார்லிமெண்டின் சபைகள் ஒவ்வொன்றிலும் நீக்க விரும்பும் நீதிபதியின் நிரூபிக்கப்பட்ட தீயநடத்தை, அல்லது ஆற்றலின்மை குறித்து ஒரு பிரேரணை கொண்டுவரவேண்டும்.

அது அச்சபையின் பெரும்பான்மையோராலும், கூட்டத்திற்கு வந்து வாக்களிப்போரில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாத பெரும்பான்மையோராலும் ஆதரிக்கப்பட்டு நிறைவேற்றப்படவேண்டும்; இந்தப் பிரேரணை ராஷ்டிரபதியிடம் அதே பார்லிமெண்டு நடைக் காலத்தில் சமர்ப்பிக்கப்படவேண்டும். அப்போதுதான் ராஷ்டிரபதி அந்நீதிபதியைப் பதவியினின்று நீக்கிவிடலாமே ஒழிய வேறு எந்த வழியிலுமன்று; இவ்வாறு உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் சுயேச்சையை அரசியலமைப்பு பாதுகாத்து வருகிறது.

# பொது நிதியின்மீது சட்டபூர்வமான கட்டுப்பாடு

பணமே எதையும் செய்ய வல்லது. நிர்வாகம் நடைபெறச் செய்வதற்கும் பணம் அவசியமானது. "எப்படிப்பட்ட காரியமும் பணத்தினலேதான் ஆகும்" என 2250 ஆண்டுகளுக்கு முன்பே கௌடிலியர் என்னும் நம் நாட்டு அறிஞர் கூறியுள்ளார். சேனே, போலீஸ், செகரட்டேரியட், ஜில்லா உத்தியோகஸ்தலங்கள் போன்ற பல இலாகாக்களே நடத்தவேண்டும்; கல்வி, உடல்நலப்பாதுகாப்பு ஆஸ்பத்திரிகள், ஔஷத சாலேகள், வீதிகள், கிணறுகள் இவை போன்றவைகளே ஏற்படுத்திச் சேவைகள் செய்ய வேண்டும். இந்த நிர்வாக வர்க்கங்களுக்குத் தேவையான செலவுப்பணங்களே மக்கள் சார்பில் மத்திய அரசாங்கத்திற்கும், இராஜ்ய அரசாங்கங்களுக்கும் வழங்குவது மக்கள் பிரதிநிதிகள் அடங்கிய மத்திய, இராஜ்ய சட்ட சபைகளே ஆகும். வரிகள் கொடுப்பவர் மக்களே; அரசாங்கக் கடன் பத்திரங்களே வாங்கிக்கொண்டு கடன் கொடுப்பவரும் மக்களே. அதனல் அப்பணம் அந்தந்த வேலேக்குப் பயன்படுத்தப்படுகிறதா, சிக்கனமாக வீணுகாமல் செலவழிக்கப்படுகிறதா என்று பார்த்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்வதால்தான் மக்கள் தங்கள் நலத்தைப் பாதுகாத்துக் கடமையைச் சரிவர செலுத்தினவர்கள் ஆவார்கள்.

மக்களின் பணத்தைக் காப்பாற்றும் வழியையும், முறையையும் அரசியல் அமைப்பு, கீழ் வருமாறு காட்டுகிறது.

1. மத்திய அரசாங்கம் தனக்குத் தேவையான செலவுத் தொகையை மக்கள் சபையில் சமர்ப்பித்து,

பார்லிமெண்டு சபைகளின் சம்மதம் பெறவேண்டும். அப்படியே ஒவ்வொரு இராஜ்ய அரசாங்கமும் தனக்கு வேண்டிய செலவுத் தொகையை அந்தந்த இராஜ்ய சட்டசபைக்களுக்குச் சமர்ப்பித்து அவற்றின் சம்மதம் பெறவேண்டும்.

2. பார்லிமெண்டும், மற்ற சட்டசபைகளும் சம்மதம் அளித்த தொகைகள், அரசாங்கங்கள் முன் குறிப்பிட்டுச் சட்டசபைகளால் ஒப்புக் கொள்ளப்பட்ட விஷயங்களுக்காகச் செலவிடுகின்றனவா என்றும், தனியாகவும், மொத்தத்திலும் அத்தொகைகளை அரசாங்கம் மீருமலிருக்கின்றனவா என்றும் பார்த்துக் கொள்ள அரசியல் அமைப்பு வழிவகைகள் செய் திருக்கிறது.

மத்திய, இராஜ்ய சட்டசபைகள் ஒவ்வொன்றிலும் அது தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கக் கணக்குக் குழு ஒன்று ஏற்படுத்த அரசியல் அமைப்பு இடம் தருகிறது.* இக்குழு முன் வருஷத்தில் எதிர்பார்த்த வரவு செலவு மதிப்பையும், செயல் முறையில் உண்மையாக ஏற் பட்ட வரவு செலவுகளையும் ஆராய வேண்டும். அதில் அரசாங்கத்திலோ, ஏதேனும் ஒரு இலாகா, உத்தி யோகஸ்தலங்கள் ஆகியவற்றிலோ வரவு செலவு மதிப்புக்கு ஏற்படும் முரண்பாடுகளை அரசாங்கத்தின் பார்வைக்குக் கொண்டு வரவேண்டும்.

## இந்தியாவின் மாபெருங் கணக்கர்—பரிசோதகர்

அரசாங்கக் கணக்குக் குழுக்கள் வரவு செலவுகளை ஆய்ந்து கட்டுப்படுத்தும்; அதற்கும் மேலாக அவ் வேலையைப் பட்சபாதமின்றிப் பார்க்கக்கூடிய மாபெருங் கணக்கர்—பரிசோதகர் என்ருேர் உத்தியோகஸ்தர் இருக்கிருர். 149 ஷரத்தில் அவரது கடமை விளக்

* இம்முறை பிரிட்டிஷ் பார்லிமெண்டின் மரபையும், முன்னைய இந்திய முறையையும் பின்பற்றியது.

கப்பட்டிருக்கிறது. அவர் மத்திய, இராஜ்ய அரசாங்கங்களின் கணக்குகளைச் சேர்த்துத் தொகுக்க வேண்டும்; அக்கணக்குகளை ஆராய்ந்து அந்தந்தச் சட்ட சபைகள் நிர்ணயித்த வழியில் குறித்த காரியங்களுக்கு ஒழுங்காகச் செலவுகள் செய்யப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்துக்கொள்ள வேண்டும்.

மத்திய அரசாங்கத்தின் கணக்குகளைப் பற்றிய தம் அறிக்கையை ராஷ்டிரபதியிடமும், ஒவ்வொரு இராஜ்யத்தின் கணக்குகளைப் பற்றிய தம் அறிக்கைகளை அந்தந்தக் கவர்னரிடமும் மாபெருங் கணக்கர் — பரிசோதகர் சமர்ப்பிப்பார். ராஷ்டிரபதி அவற்றைப் பார்லிமெண்டினிடமும், கவர்னர்கள் தங்கள் சட்ட சபையினிடமும் கொடுப்பார்கள். இப்படிப்பட்ட ஆராய்ச்சியும் அறிக்கைகளும் கண்டிப்பாகவும், பாரபட்சமில்லாமலும் இருந்தாலே நல்ல பலன் ஏற்படும்.

மாபெருங் கணக்கர் — பரிசோதகரின் உத்தியோகம், உத்தியோககால நிபந்தனைகள் யாவும் உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் உத்தியோகம் முதலியவற்றைப் போன்றவை. (1) இவர் ராஷ்டிரபதியால் நியமிக்கப்படுவார். (2) உத்தியோககாலம் முடிவடையுமுன் இவரைப் பதவியிலிருந்து நீக்க இயலாது; உச்ச நீதி மன்ற நீதிபதிகளைப் பார்லிமெண்டு வாக்களித்து நீக்குவது போல் இவரை நீக்கலாம். (3) இவரது சம்பளம், படியெல்லாம் சஞ்சித நிதியிலிருந்து செலவு செய்யப்படும்; எனவே பார்லிமெண்டின் வருஷாந்தர சம்மதத்தை இவைகளுக்குப் பெறவேண்டியதில்லை.

## நிதிக் கமிஷன்

மக்களால் அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்ட பணத்தைச் சீர்பெறச் செலவு செய்யும்படிப் பார்த்துக் கொள்ள அரசியல் அமைப்பில் மேலும் ஒரு வழி கண்டிருக்கிறது; அதன் 200-ஆம் ஷரத்துப்படி ராஷ்டிரபதி ஒரு நிதிக் கமிஷனை நியமிக்க வேண்டும்.

அரசியலமைப்பின் கீழ் மத்திய, இராஜ்ய அரசாங்கங்கள் என இருவகை அரசாங்கங்கள் இருக்கின்றன. மத்திய அரசாங்கம் இராஜ்யப் பிரதேசங்களின் மக்களிடத்திலிருந்து வருமானவரி, சுங்கத்தீர்வை போன்ற இலாபகரமான வரிகளை விதித்து வசூலிக்கிறது; பெரும்பாலான இராஜ்ய அரசாங்கங்களின் வருவாய் மத்திய அரசாங்கத்தைப்போல அதிகமில்லை. எனவே இராஜ்ய அரசாங்கங்கள் தம் செலவுகளை வரவுக்குள் ஈடுபடுத்த முடியாமல் கஷ்டப்படுவது அனுபவ பூர்வமானது. ஆதலால் அரசியல் அமைப்பு 200-ஆம் ஷரத்தின்படி 5 வருஷங்களுக்கு ஒரு முறை ராஷ்டிரபதி ஒரு நிதிக் கமிஷனை நியமிப்பார்; அக்கமிஷனில் ஒரு தலைவரும் நான்கு அங்கத்தினரும் அமர்ந்து வேலை பார்ப்பார்கள். வசூலித்த வரிகளில் செலவுகள் போக மிகுதியை மத்திய அரசாங்கமும் மற்ற இராஜ்யங்களும் எப்படிப் பிரித்துக்கொள்ள வேண்டும் என்றும், இராஜ்யங்களின் பங்கை அவை எந்த விகிதத்தில் தனித் தனி அடைய வேண்டும் என்றும் நிதிக் கமிஷன் ராஷ்டிரபதிக்குச் சிபார்சு செய்யும். மற்றும் அந்தந்தக் காலத்தில் அந்தந்த இராஜ்யத்துக்குக் கொடுக்க வேண்டிய உதவி நிதி (சகாய கிராண்டு) யைப்பற்றிய நெறிமுறைகளையும் கமிஷன் ராஷ்டிரபதியிடம் கூறும். இப்படி மத்திய அரசாங்கம் தனது வரிகளினால் வரும் பணத்தை இராஜ்ய அரசாங்கங்களுடன் பங்கிட்டுக் கொள்ள வேண்டிய நெறிமுறையை நிதிக் கமிஷன் மத்திய அரசாங்கத்திற்கு எடுத்துக் கூறுகிறது. பார்லிமெண்டுக்கு (அதாவது மத்திய சட்டசபையில் உள்ள மக்கள் பிரதிநிதிகள்) இந்தச் சிபாரிசுகள் அறிவிக்கப்படும். நிதிக் கமிஷனின் ஒவ்வொரு சிபாரிசும், மத்திய அரசாங்கம் எடுத்துக்கொண்ட செயலைப் பற்றிய விளக்க உரையும், பார்லிமெண்டின் இருசபைகளுக்கும் ராஷ்டிரபதியால் அனுப்பப்பட வேண்டும்.

# மத்திய - இராஜ்ய அரசாங்கத் தொடர்புகள்

மத்திய அரசாங்கம் என்றும், இந்திய யூனியனில் அடங்கிய இராஜ்யங்கள் என்றும் இரு பிரிவான அரசாங்கங்கள் உண்டு என அறிகிறோம். ஆகையால் எந்த அரசியல் அமைப்பும் இத்தகைய அரசாங்கங்களுக்கிடையே இருக்கவேண்டிய தொடர்புகளை நிர்ணயித்து விளக்கவேண்டும்; அப்போதுதான் அரசாங்கங்களுக்குள் மோதலும், சச்சரவும் ஏற்படா. நமது அரசியல் அமைப்பு அவ்வாறே செய்துள்ளது. 245 ஆம் ஷரத்து நாடு முழுவதுக்கும் பார்லிமெண்டு சட்டம் இயற்றலாம் என்று பொதுப்படையாகவும் பெரும்போக்காகவும் விதிக்கிறது. ஆனல் யூனியன் பட்டியலில் கண்ட பல விஷயங்களைக் குறித்து மத்திய பார்லிமெண்டு சட்டம் செய்யும் தனி அதிகாரம் பெற்றது என்று 246 ஆம் ஷரத்து வற்புறுத்துகிறது.

இந்த நிர்வாக விஷயங்கள் இந்தியா முழுமையும் பாதிப்பவை; எனவே இவ்விஷயங்களை எந்த இராஜ்யத்தினிடமும் ஒப்படைக்க முடியாது. இவை அகில இந்திய தேசீயத்தன்மையும், நோக்கும் பெற்றவை. இவ் விஷயங்களைப் பல இராஜ்யங்களின் பொறுப்பில் விட்டுவிட்டால் குழப்பமும், ஒழுங்கின்மையும், பலஹீனமும் ஏற்படும். இப்படிப்பட்ட விஷயங்களாவன:- இந்தியாவின் தற்காப்பு, அந்நியநாட்டு விஷயங்களில் கொண்ட கொள்கைகள் (அவையாவன: அந்நிய நாடுகளுடன் கொண்ட தொடர்புகள்); உள்நாட்டிலும் வெளிநாடுகளோடும் வியாபார வர்த்தக முறைகளை ஒழுங்குபடுத்துதல்; ரயில்-மார்க்கம், பெரிய சாலைகள், ஆகாய மார்க்கம், அஞ்சல், தந்தி இலாகாக்கள் போன்ற

போக்கு வரவு சாதன ஏற்பாடுகள் செய்தல்; நாட்டு எல்லா மக்களது தேவைகளையும் பூர்த்திசெய்தல்; அவர்கள் நலங்களை வளர்த்தல்; அவர்கள் வாழ்க்கை, முயற்சிகளைச் செம்மை பெறுவதற்கான சட்டங்கள், ஏற்பாடுகள் செய்தலும் ஆகும்.

இத்தகைய மத்திய அரசாங்கப் பொறுப்பில் உள்ள விஷயங்கள் ஒவ்வொன்றையும் முடித்துவைக்கப் பணம் தேவை. எனவே மத்திய அரசாங்கத்திற்கு இந்திய மக்களிடமிருந்து வரி வசூலிக்கும் உரிமையும் அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அரசியல் அமைப்பின் VII ஆம் ஷெடியூலில் யூனியன் ஜாபிதா என 97 விஷயங்கள் மத்திய அரசாங்கத்தின் பொறுப்பில் விடப்பட்டிருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் மேலே கூறப்பட்ட முக்கியமான பகுதிகள் ஒன்றில் அடங்கும்.

இந்த விஷயங்களை யூனியன் ஜாபிதாவில் சேர்க்க வேண்டிய காரணத்தையோ, நியாயத்தையோ விளக்குவதற்கு அதிகநேரம் ஆகாது. நாட்டின் தற்காப்பு மத்திய அரசாங்கத்தினிடமே ஒப்படைக்கப்பட வேண்டும். போரில் (தற்காப்புப் போரே ஆனாலும்) வெற்றி அடையவேண்டுமானால் படைகள் ஏக தலைமையும், அதிகாரமும், பொறுப்பும் பெற்று இயங்க வேண்டும். இந்தத் தற்காப்பு வர்க்கம் முழுமைக்கும் ஏற்படும் செலவுகளைச் சிக்கனமாகச் செய்யவேண்டும். அதற்கும் தற்காப்பு இலாகா, மத்திய அரசாங்கத்தின் தனிப் பொறுப்பிலே முழு அதிகாரமும் இருக்க வேண்டும். அப்போதுதான் மத்திய அரசாங்கம் நாட்டின் தற்காப்பைக் கவனித்துச் சேவைசெய்ய முடியும். ஒவ்வொரு இராஜ்யமும் தனித்தனி சேனையும் அதை நடத்தும் தனித்தனி சேனாதிபதியும், தனக்கு வரும் குறைந்த வருவாயிலிருந்து அப்படைகளுக்குச் செய்ய வேண்டிவரும் செலவுகளையும் கற்பனை செய்து பார்த்தால் இதன் அவசியம் நன்கு விளங்கும். சரித்திரத்

தைப் படித்தால் அதனுலேற்படும் அனுபவத்திலிருந்து நாம் தேசீய தற்காப்புப் படைகள் மத்திய அரசாங்கப் பொறுப்பில் விடுவதனுல் வரும் நன்மைகளே நாம் நன்கு உணர்வோம்.

நம் நாடு போன்ற பல இராஜ்யங்கள் சேர்ந்த யூனியனுக விளங்கும் சுவிட்சர்லாந்து, கன்னடா, ஆஸ்திரேலியா, ஐக்கிய அமெரிக்க நாடுகள் ஆகிய நாடுகளிலும் நாட்டின் பாதுகாப்பு அந்தந்த தேசீய அரசாங்கத்தினிடமே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

வெளிநாட்டுக் கொள்கை இந்தியாவின் தேசீயப் பொறுப்பாகும்; அது ஒரேவிதமாக அமையவேண்டும்; ஒவ்வொரு இராஜ்யமும் மாறுபடக்கூடிய தம்தம் வெளி நாட்டுக் கொள்கையை மேற்கொள்வது நாட்டின் நலத்தைப் பாதிக்கும். இப்படியே உள்நாட்டு வியாபாரம் செம்மையாக வளர்ச்சிபெற, நாடு முழுதும் ஒரே விதக் கோட்பாடு அவசியம்; ஒவ்வொரு இராஜ்யமும் தனித்தனி கோட்பாடுகளேக் கொண்டு அவ்விராஜ்யத்திலிருந்து வெளியேறும் சரக்குகளுக்கும், உள்வரும் சரக்குகளுக்கும் தீர்வை போட்டால் வியாபாரம் தடைப்பட்டு தீமை ஏற்படலாம். வெளிநாடுகளுடன் கொண்டுள்ள வாணிபம் ஓங்கிவளர நாட்டுக்கெல்லாம் ஒரே அரசாங்கம் (மத்திய அரசாங்கம்) ஏற்றுமதி இறக்குமதித் தீர்வைகளே நிர்ணயிக்கும் அதிகாரம் பெற வேண்டும். அப்படியின்றி இராஜ்யங்கள் தனித்தனியே வெளிநாட்டு வியாபாரத்தை மேற்கொண்டால் குழப்பம் ஏற்படும்; அவ்வியாபாரம் செழித்து வளர முடியாது. பெரிய சாலேகள், அஞ்சல்-தந்தி முதலிய தேசீயப் போக்குவரவு சாதனங்களும் பெருகி, மக்களுக்கு நன்மை பயக்க வேண்டுமானுல் தேசீய கண்ணேட்டத்தோடு பார்க்கக்கூடிய ஒரே அரசாங்கத்தினிடமே இருப்பது அவசியம் என நன்ருக விளங்கும். மேலும் தேசீய ஒற்றுமையை நிலேநாட்டுவதற்கு நாடெங்கும் ஒரேவகை

யான சட்டங்கள் இயற்றுவதே பயன் தரக்கூடியது என்று நாம் பல தேசங்களின் அனுபவத்திஞல் அறி கிருேம்.

ஆனல் ஒவ்வொரு இராஜ்யத்தின் மக்களுக்கும் விசேஷ தேவைகளும், விசேஷ சந்தர்ப்பங்களும், விசேஷ தகுதிகளும் அமைந்து இருக்கலாம். அவைகளுக்குத் தகுந்தபடி சில பொதுநல சேவைகளே அந்தந்த இராஜ் யங்களே திறம்படச் செய்யமுடியும். அத்தகைய நிர்வாக விஷயங்களாவன: கல்வி, சுகாதாரம், மற்ற சமூகநல சேவை, விவசாயம், தொழில்கள், காடுகள், இராஜ்யத்திற்கு மட்டும் பயன்படும் சாலைகள் முதலி யன. பொதுஜன ஒழுங்கு, அமைதி, பாதுகாப்பு முதலி யவற்றை அந்தந்த இராஜ்ய போலீஸ் இலாகாவே செம்மையாகப் பார்த்துக்கொள்ளக்கூடும். இப்படி இராஜ்யங்கள் மேற்கொள்ளும் விஷயங்களேக் குறித்து சட்டங்களேச் செய்யவும், ஏற்படும் செலவுகளேச் செய்ய வும் இராஜ்யங்கள் அதிகாரம் பெறவேண்டும்.

நமது அரசியல் அமைப்பு சுயேச்சையான குடிய ரசுச் சட்டம்; ஆகவே அது மக்களது சுயாட்சிக்கு வாய்ப்புத்தரவேண்டும். தேசீய முக்கியத்துவமும், தேசீயபொறுப்பும் தேவைஇல்லாத விஷயங்களே இராஜ் யங்கள் பார்த்து வருவதுதான் சிறந்த முறை; அப் போதுதான் இராஜ்ய மக்கள் தங்களுக்கு நெருங்கிய தொடர்புள்ள சட்டமன்ற பிரதிநிதிகள், மந்திரிகள் மூலம் (நெடுந்தூரத்தில் தலேநகரிலுள்ள பார்லிமெண்டு மத்திய அரசாங்க மந்திரிகள் மூலமல்ல) தங்கள் தேவை களுக்கும், விருப்பங்களுக்கும், நன்மைகளுக்கும் தகுந் தாற்போல தங்கள் இராஜ்யத்தின் கோட்பாடுகளேயும், திட்டங்களேயும் அமைத்து பெருநன்மை அடைய முடி யும். ஆதலால் இராஜ்யங்கள் தங்கள் தங்கள் சட்டம், நிர்வாகம், நீதி சம்பந்தமான வர்க்கங்களே வைத்து நடத்துவது அந்த இராஜ்யங்களின் பொறுப்பில் அடங்

கும். இராஜ்யங்கள் இடம் இவ்வாறு "விஷயங்கள் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. இவை அரசியல் அமைப்பு VII ஆவது ஷெடியூலில் இராஜ்ய ஜாபிதாவின் கீழ்க் காணலாம். அவைகள் யாவும் நாம் மேலே குறிப்பிட்ட முக்கிய தலைப்புக்கள் ஏதாவதொன்றின் அடியில் சேரும்.

யூனியன் ஜாபிதா, இராஜ்ய ஜாபிதா ஆகிய இரண்டு ஜாபிதாக்களில் உள்ள விஷயங்களைக் கவனித்தோம். இவைகளை அன்றி மூன்ருவது ஒரு ஜாபிதா அரசியல் அமைப்பின் VII ஆம் ஷெடியூலில் இருக்கிறது. அதுவே கூட்டு ஜாபிதாவாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற பல இராஜ்யங்கள் சேர்ந்த யூனியன்களில் மத்திய அரசாங்கம், இராஜ்ய அரசாங்கங்களின் வேலைகள் தெளிவாகவும் முடிவாகவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் வேறு சில யூனியன் அரசுகளில் இராஜ்யங்களுக்குக் கொடுக்கப்பட்ட பல விஷயங்களில் மத்திய அரசாங்கமும் அதிகாரம் செலுத்தும். இதற்கு இரண்டொரு காரணங்கள் உண்டு: இப்போது இராஜ்யங்களுக்கு அதிகாரம் வழங்கப்படும் விஷயங்கள் முன்பு மத்திய யூனியன் கவனித்து வந்திருக்கலாம் (வரலாறு). பிளவு, பிரிவு போன்ற நாட்டிலுள்ள இயல்புகளை மாற்றி மத்திய அரசாங்கத்தின் அதிகார எல்லையையும், அதிகாரத்தையும் வலுப்படுத்துவது போன்ற அரசியல் தேவைகள் மற்றுமொரு காரணமாகும். இப்படிப்பட்ட விஷயங்கள் கூட்டு ஜாபிதாவில் சேர்க்கப்படும். நமது யூனியனது அரசியல் அமைப்புப் போன்ற கன்னடா, ஆஸ்திரேலியா நாடுகளின் அரசியல் அமைப்புகளிலும் கூட்டு ஜாபிதா உண்டு. ஆனல் அந்நாட்டு ஜாபிதாக்களை விட நம் நாட்டுக் கூட்டு ஜாபிதா நீளமானது அதற்குக் காரணம் இந்தியத் தேசீய ஒற்றுமை அந்நாடுகளைப் போல அவ்வளவு தூரம் இணைந்து உறுதிப்படவில்லை. இந்தக் கூட்டு ஜாபிதாவில் 47 விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் கிரிமினல்

சட்டங்கள், கிரிமினல் வழக்குமுறை, சிவில் வழக்கு முறை, விவாகம், விவாக ரத்து, பொது அமைதிப் பாதுகாப்பு, தொழிலாளர்களின் பொதுநலம், தொழிலாளிகள் தொழில்முறைப் பயிற்சி, பார்லிமெண்டால் தேசீய முக்கியத்துவம் வாய்ந்தவை என்று நிச்சயிக்கப் பட்ட தொழில்கள், நீதிமன்றங்களின் அதிகார எல்லை, அவற்றின் அதிகாரம், தொழிற்சாலைகள், செய்தித் தாள்கள், புத்தகங்கள், தருமங்கள், தருமசாலைகள் போன்றவை மிகவும் முக்கியமானவை. இராஜ்ய அரசாங்கங்களும் கூட்டு ஜாபிதாவில் கண்ட விஷயங் களின் மீது அதிகார எல்லை பெற்றன; ஆயினும் மத்திய பார்லிமெண்டும், மத்திய அரசாங்கமும் அந்த விஷயங்களைக் குறித்துச் சட்டங்கள் இயற்றலாம்.

இவ்விரண்டு வகைச் சட்டங்களில் மாறுபாடும் முரண்பாடும் ஏற்படக்கூடும்; அப்போது மத்திய அர சாங்கம் செய்த சட்டங்களே சக்திவாய்ந்து நிலைநாட்டக் கூடியதென்று அரசியல் அமைப்பு 254 ஆம் ஷரத்து மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை மேலும் வலுப் படுத்துகிறது.

249 ஆம் ஷரத்து மத்திய அரசாங்கத்துக்கு சில சந்தர்ப்பங்களில் இராஜ்ய ஜாபிதாவில் கண்ட விஷயங் களைப் பற்றியும் மத்திய சட்டமன்றம் சட்டம் இயற்ற அதிகாரம் அளிக்கிறது. அதற்குமுன் பார்லிமெண்டு அப்படிப்பட்ட சட்டம் இயற்றவேண்டிய அவசியமும், சந்தர்ப்பமும் ஏற்பட்டிருக்கிறது என்று ஒரு தீர்மா னத்தை இராஜ்ய பரிஷத்து நிறைவேற்றவேண்டும்; அத்தீர்மானம் மேல் சபையில் வந்து வாக்களிப்போரில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாத பெரும் பான்மையோரின் ஆதரவு பெறவேண்டும்.

மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் 248 ஆம் ஷரத்தின் மூலம் பின்னும் வலுப்படுகிறது. அதன்படி

இராஜ்ய ஜாபிதாவிலும் கூட்டு ஜாபிதாவிலும் சேர்க்கப் படாத எந்த விஷயத்தைக் குறித்தும் மத்திய பார்லிமெண்டு சட்டங்கள் செய்யும் விசேஷ அதிகாரம் பெற்றது என்று வற்புறுத்துகிறது. அரசியல் அமைப்புச் சம்பந்தமான மொழியில் இராஜ்யங்களுக்கு ஒப்படைக்கப்படாத விஷயங்கள் (அரசியல் அமைப்பில் அவ்வாறு கூருமற் போனாலும்) மத்திய அரசாங்கப் பொறுப்பைச் சார்ந்தவை; அவைகளைக் குறித்துச் சட்டங்கள் இயற்றும் அதிகாரம் அந்த அரசாங்கத்தினிடமே உள்ளது. ஆனால் அமெரிக்க ஐக்கியநாடுகளின் அரசியல் அமைப்பு அப்படிப்பட்டதல்ல. மத்திய அரசாங்க விஷயம் இது, இராஜ்ய அரசாங்க விஷயம் இது என்று தெளிவாகக் கூறப்படாத விஷயங்கள் எல்லாம் இராஜ்யங்களின் அதிகாரத்தில் அடங்கும்.

இவைகளிலிருந்து நாம் ஒரு முக்கியமான விஷயம் உணரலாம். அரசியல் அமைப்பு மூலம் இந்தியாவில் நிறுவப்பட்ட அரசாங்கம் அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிட்ஸர்லாந்து, கன்னடா, ஆஸ்திரேலியா போன்ற பெடரேஷன் (மிக்க சுயேச்சையும் அதிகாரமும் பெற்ற இராஜ்யங்களின் கூட்டுத் தொகுதி) அல்ல. மத்திய அரசாங்கம், இராஜ்ய அரசாங்கங்களைவிடப் பரந்த அதிகார எல்லையும் மிக்க அதிகாரமும் பெற்றுள்ளது. அதனால் நமது அரசியல் அமைப்பு 'பெடரேஷன்' என்று அழைக்கப்படாமல் யூனியன் (வலிய மத்திய அரசாங்கத்தைக் கொண்ட இராஜ்யங்களின் சேர்ப்பு) என வழங்கப்படுகிறது.

# மத்திய-இராஜ்ய அரசாங்க நிர்வாகத் தொடர்புகள்

அரசியலமைப்பு, சட்டங்கள், சட்டங்கள் செய்தல் ஆகியவற்றில் மத்திய அரசாங்கத்திற்கும், இராஜ்யங்களுக்கும் அவ்வவற்றின் வேலைகளை வரையறுத்திருக்கிறது. அரசியல் அமைப்புச் சட்டம், அதுபோலவே நிர்வாகத்திலும் அவ்வகையான பிரிவினையைச் செய்திருக்கிறது. தான் சட்டம் செய்யும் அதிகாரம் பெற்ற எல்லா விஷயங்களிலும் மத்திய அரசாங்கம் நிர்வாக அதிகாரம் பெற்றுள்ளது (ஷரத்து 73). அம்மாதிரி ஒவ்வொரு இராஜ்ய சட்டசபையும்தான் சட்டம் இயற்ற வல்ல எல்லா விஷயங்களிலும் அந்த இராஜ்ய அரசாங்கம் நிர்வாக அதிகாரம் பெற்றது என 162 ஆம் ஷரத்து நிலைநிறுத்தும். அப்படியே அரசியல் அமைப்பில் VII ஷெடியூலில் மூன்று வகையான விஷயங்கள் கூறப்பட்டுள்ளன.

1. மத்திய அரசாங்கத்தின் விஷயங்கள். இவ்விஷயங்களைக் குறித்த நிர்வாக அதிகாரம் மத்திய அரசாங்கத்தைச் சார்ந்தது.

2. இராஜ்ய அரசாங்கத்தின் விஷயங்கள். இவைகளைப் பற்றிய நிர்வாக அதிகாரம் இராஜ்ய அரசாங்கங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

3. மத்திய-இராஜ்ய அரசாங்கங்களுக்குப் பொதுவான விஷயங்கள். மத்திய அரசாங்கமும் இராஜ்ய அரசாங்கமும் சேர்ந்து இவ்விதமான கூட்டு அதிகாரத்தைச் செலுத்துவதனால் குழப்பமும், மோதலும் முட்டுக்கட்டையும் ஏற்படலாம் அல்லவா? இத்தகைய நிலை

யைத் தடுக்க, அரசியல் அமைப்பின் 256 ஷரத்து வழி வகுக்கிறது: பார்லிமெண்டு செய்த சட்டங்களுக்கும் அந்தந்த இராஜ்யத்தில் அமுலில் உள்ள சட்டங்களுக் கும் ஒத்த முறையில் ஒவ்வொரு இராஜ்ய அரசாங்க மும் தனது நிர்வாக அதிகாரத்தைச் செலுத்தவேண் டும்; மேலும் மத்திய அரசாங்கம் இராஜ்ய அரசாங்கங் களுக்குத் தேவையெனக் கருதும் காலங்களில் கோட்பாடு முறைகளைக்காட்டுவதும் மத்திய அரசாங்கத் தின் நிர்வாக அதிகாரத்தின் உட்பட்டது என256-ஆவது ஷரத்து கூறுகிறது. மேலும் இந்த ஷரத்து, மத்திய அரசாங்கத்தின் நிர்வாக அதிகாரத்தைத் தடுத்து மாற்றுமல் இருக்கும் வகையிலேயே, இராஜ்ய அரசாங்கங்கள் தங்கள் நிர்வாக அதிகாரத்தைச் செலுத்தவேண்டும் எனவும் வழி வகுக்கிறது. இந்த ஷரத்து பொதுப்படையானது; குழப்பமும், மோத லும் முட்டுக்கட்டையும் ஏற்படக்கூடிய விஷயங்களை மாத்திரம் பற்றியவை அல்ல.

பார்லிமெண்டு செய்த சட்டங்களை எல்லாம் இராஜ்ய அரசாங்கங்கள் நிலைநிறுத்தவேண்டும். மேலும் இராஜ்ய அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்தோடு ஒத்துழைத்து அரசியல் அமைப்பில் அளித்துள்ள அதன் நிர்வாக அதிகாரத்தை அந்தந்த இராஜ்யத்தில் செலுத்துவதில் உதவி புரியவேண்டும்.

ஒவ்வொரு இராஜ்ய அரசாங்கமும் தனது பொதுச் சட்டங்கள், பத்திரங்கள், நீதிமன்றங்களில் நடக்கும் வழக்கு முறைகள் ஆகியவைகளுக்கு எவ்வளவு நம்பிக் கையும் மதிப்பும் அளிக்குமோ அவ்வளவு நம்பிக்கையும் மதிப்பும் மத்திய அரசாங்கச் சட்டங்கள், பத்திரங்கள், நீதிமுறைகள் ஆகியவைகளுக்கும் தனது பிரதேசத்தில் அளிக்கவேண்டும் என 261 ஷரத்து கூறுகிறது.

பல இராஜ்யங்கள் மூலம் ஆறுகள் செல்லலாம்; அதனால் அந்த ஆறுகளின் ஜலத்தைக் குறித்தும், படுகைகளைக் குறித்தும் சச்சரவுகள் ஏற்படலாம் அல்லவா? அவைகளை நியாயம் தீர்த்துக் கூறுவதற்கு அரசியலமைப்பில் வழி கூறப்பட்டிருக்கிறது. மேலும் ராஷ்டிரபதி பல இராஜ்யங்கள் பிரதிநிதிகள் அடங்கிய குழு ஒன்றை அமைக்கலாம்; அக்குழு இராஜ்யங்களுக்குள் ஏற்படும் சச்சரவுகளை விசாரணைசெய்து யோசனை கூற வேண்டும். மேலும் இக்குழு சில அல்லது எல்லா அரசாங்கங்களோடும் மத்திய அரசாங்கம் கொண்டுள்ள தொடர்புகள் பற்றிய விஷயங்களை ஆராய்ந்து கோட்பாடுகளையும் செயல்களையும் அரசாங்கங்களிடையே ஒற்றுமைப் படுத்தச் சிபாரிசு செய்ய வேண்டும்.

## இராஜ்ய அரசாங்கங்களை விலக்கும் அதிகாரம்

சாதாரண காலங்களில் மேற்கூறியவைகளே மத்திய அரசாங்கத்திற்கும், இராஜ்ய அரசாங்கங்களுக்கும் இடையே உள்ள சட்டபூர்வமான தொடர்புகள். ஆனால் அசாதாரணமான சிக்கல்களும், ஆபத்துக்களும் ஏற்படுங் காலங்களில் இராஜ்ய அரசாங்கங்கள்மீது செலுத்தக் கூடிய விசேஷ அதிகாரத்தை மத்திய அரசாங்கம் கொண்டுள்ளது. சண்டையினாலோ, பிறநாட்டுப் போரினாலோ, உள்நாட்டுக் கலகத்தினாலோ, இந்தியாவின் முழுமைக்கும், அல்லது ஒரு பகுதிக்கு ஆபத்து வரக் கூடிய கஷ்ட நிலை ஏற்பட்டிருக்கிறதென ராஷ்டிரபதி உணர்ந்தால் 352 ஷரத்தின்படி அவர் அதை ஒரு பிரகடனம் மூலம் மக்களுக்குத் தெரிவிக்கலாம். இது இரண்டு மாதம்வரை அமுலில் இருக்கும்; இக்காலத்தைப் பார்லிமெண்டு நீடிக்கச் செய்யமுடியும். இத்தகைய ஆபத்துக் காலங்களில் எந்த இராஜ்யத்தின் நிர்வாக அதிகாரத்தையும் (நிதி உள்பட) நிறுத்தி அவ்வதிகாரத்தை ராஷ்டிரபதி மேற்கொண்டு மத்திய அரசாங்க

மந்திரிகள் மூலம் செலுத்தலாம். அவ்விதமே சட்டம் செய்யும் அதிகாரத்தையும் மத்திய அரசாங்கம் மேற்கொள்ளும்.

சில சமயங்களில் அரசியலமைப்பின்கீழ் ஏதாவது ஒரு இராஜ்ய அரசாங்கம் நடைபெற முடியாமல் போகலாம். அப்போது அரசியல் அமைப்பு ஏற்படுத்திய முறைப்படி ஆளக் கூடிய இயக்கம் தவறிவிடும். அக்காலங்களிலும் 356 ஷரத்துப்படி ராஷ்டிரபதி அந்த இராஜ்ய ஆட்சிப் பொறுப்பை மேற்கொள்ளுவார். அந்த இராஜ்ய உயர் நீதி மன்றத்தின் அதிகாரத்தை மட்டுமே ராஷ்டிரபதி நீக்க இயலாது, ஆனால் அத்தகைய ஆபத்துக் காலங்களில் அரசியலமைப்பில் உத்தரவாதத்துடன் அளிக்கப்பட்ட உரிமைகளைத் தற்காலிகமாக ராஷ்டிரபதி ஒதுக்கிவைக்கலாம்.

# மத்திய பப்ளிக் சர்விஸ் கமிஷன்

இராஜ்யங்களில் உள்ள சர்வீஸ் கமிஷனைப் போன்றே மத்திய அரசாங்கத்திற்கும் ஒரு சர்வீஸ் கமிஷன் உண்டு. அதன் அமைப்பு, அதிகாரம், கடமைகள் எல்லாம் இராஜ்யக் கமிஷனை ஒத்தவை. மத்திய அரசாங்க உத்தியோகங்கள், அகில இந்திய உத்தியோகங்களடங்கிய வருமானவரி இலாகா, தீர்வை இலாகா, இந்தியக் கணக்கர் - பரிசோதகர் இலாகா, பழைய தேசீய சிவில் சேவா வர்க்கம் போன்ற இந்திய நிர்வாக சேவா வர்க்கம், [இதிலிருந்தே மத்திய அரசாங்கத்திற்கு மட்டுமல்லாமல் ராஜ்ய அரசாங்கங்களுக்கும் உயர்ந்த நிர்வாக உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.] இந்தியப் போலீஸ் சேவா வர்க்கம் [இதிலிருந்தே மத்திய அரசாங்கத்திற்கு மட்டுமல்லாமல் ராஜ்ய அரசாங்கங்களுக்கும் உயர்ந்த போலீஸ் உத்தியோகஸ்தர்கள் தேர்தெடுக்கப்படுவார்கள்] ஆகியவற்றிற்கு, உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுத்தல் கமிஷனின் கடமையாக அமையும். இவற்றோடு அவ்வுத்தியோகஸ்தர்களின் ஒழுங்குமுறையும் இக்கமிஷனின் அதிகாரத்துக் குட்பட்டது.

# அரசியலமைப்பைத் திருத்தி அமைக்கும் முறை

எவ்வளவு ஆழ்ந்த யோசனையோடும் அறிவோடும் அமைக்கப்படினும் ஒரு அரசியலமைப்பு குற்றமற்றது எனக் கொள்ள முடியாது. வளர்ந்து வருகின்ற நாட்டிற்கும், முன்னேறிச் செல்லும் அதன் மக்களுக்கும் ஏற்படக் கூடிய சூழ்நிலையை முன்கூட்டியே கண்டறிந்து தக்கவாறு அரசியலமைப்பில் வகை செய்து வைத்தல் அரிதாகும். எனவே ஒவ்வொரு அரசியலமைப்பிலும் அதை மாற்றி அமைக்க வழி வகுத்து இருக்கிறது. அரசியலமைப்பு நாட்டின் அடிப்படையான சட்டம். அது மக்களின் உரிமைகள் இவை எனக் காட்டி அவைகளை உத்திரவாதத்துடன் அளிக்கிறது; அது முக்கியமான சுதந்திர அரசாங்கம் அமைப்பதையும், அந்த அரசாங்கத்தின் கடமைகளையும் செயல்களையும் கூறுகின்றது. மேலும் மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் உள்ள தொடர்பையும் விளக்குகிறது. எனவே எளிதாகவோ, விரைவாகவோ திருத்தங்கள் செய்யமுடியாத வகையில் அரசியல் அமைப்பு அமைந்திருக்கிறது. அப்போதுதான் செய்யும் திருத்தங்கள் மக்களின் ஆழ்ந்த யோசனையின் பயனாக அமையும். இல்லையேல் சமுதாயத்தில் உள்ள சக்தி வாய்ந்த ஒரு பகுதி அல்லது ஒரு கட்சியினரின் தற்காலிக உணர்ச்சி மேலீட்டாலும், எரிச்சலாலும் செய்தனவாக அத்திருத்தங்கள் ஆகிவிடும்.

இவ்வகையில் அமெரிக்காவின் அரசியலமைப்பில் எப்பகுதியிலாவது திருத்தங்கள் செய்ய வேண்டுமானல் நீண்டகாலம் சிக்கலான பல ஆலோசனைகளைச் செய்து அதனுல் ஏற்படும் முடிவைக் கொண்டே செய்யலாம். பெடரல் சட்டசபையாகிய காங்கிரஸ் மன்றத்

தின் மூன்றில் இரண்டு பங்கு அங்கத்தினராவது குறித்த திருத்தத்தைப் பிரேரேபிக்க முன்வரவேண்டும்; அல்லது அங்குள்ள மூன்றில் இரண்டு பங்கு இராஜ்யங்களால் திருத்தம் செய்ய நியமிக்கப்பட்ட கமிட்டியும், நான்கில் மூன்று பங்கு இராஜ்யங்களும் திருத்தத்தை ஒப்புக்கொள்ள வேண்டும்.

சுவிட்ஸர்லாந்தில் அரசியலமைப்புத் திருத்தங்களை, அத்திருத்தங்களைக் குறித்து மக்களின் இஷ்டத்தை அவர்கள் வாக்கின் மூலம் அறிந்தபிறகே செய்யலாம்.

இந்தியாவில் அசியலமைப்பில் திருத்தங்கள் செய்வது எளிது என்றே கூறவேண்டும். அரசியலமைப்பின் 368-வது ஷரத்தின்படி மத்திய சபைச் சட்டங்கள் ஒன்றில் திருத்தத்திற்காக ஒரு மசோதாவைக் கொண்டுவர வேண்டும். மொத்த அங்கத்தினர்களில் பெரும்பான்மையோராலும், கூட்டத்திற்கு வந்து வாக்களிப்பவர்களில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாத அங்கத்தினர்களாலும் திருத்த மசோதா நிறைவேற்றப்படவேண்டும். மேலும் ராஷ்டிரபதியின் சம்மதம் பெற்ற பிறகே மசோதாவில் கொண்டுவரப்பட்ட திருத்தம் அரசியலமைப்பில் அமுலுக்குவரும். பின்வரும் விஷயங்களைப் பற்றிய திருத்தங்கள் (முதல் ஷெடியூலில் முதலிரு பாகங்களில் கண்ட) பெரிய இராஜ்யங்களில் உள்ள சட்டசபைகளுள் பாதிக்கு மேலானவை அத்திருத்தத்தை ஒப்புக்கொண்டதை நிறைவேற்றிய பிரேரணை மூலம் ராஷ்டிரபதி சம்மதம் பெற, அனுப்புமுன் தெரிவிக்கவேண்டும்.

ராஷ்டிரபதி தேர்தல், தேர்தல் முறையைக் குறிக்கும் அரசியலமைப்பின் 54, 55-வது ஷரத்துக்கள்; மத்திய இராஜ்ய அரசாங்கங்களின் நிர்வாக அதிகார எல்லையைப் பற்றிய முறையே 73, 162-வது ஷரத்துக்கள்; மூன்ருவது வகையைச் சார்ந்த சிறிய இராஜ்யங்களின் உயர்நீதி மன்றங்கள் குறித்த 241-வது ஷரத்து,

உச்சநீதி மன்றத்தைக் குறித்த ஷரத்து; மத்திய அர சாங்கத்திற்கும் இராஜ்ய அரசாங்கத்திற்கும் உள்ள சட்டசம்பந்தமான தொடர்பு பற்றிய ஷரத்து; மத்திய இராஜ்ய அரசாங்கங்களுக்கும் தனித்தனி ஏற்படுத்திய நிர்வாக விஷயப்பட்டியல்களைக் கூறும் ஷரத்து; மத்திய சட்டசபைக்கு, இராஜ்ய சட்டசபையின் பிரதிநிதியைத் தேர்ந்து எடுப்பது பற்றிய ஷரத்து; அரசியலமைப் புக்கே திருத்தம் அமைப்பதைப் பற்றிக் கூறும் ஷரத்து ஆகியவற்றிற்குத் திருத்தம் அமைக்க மேற்கண்ட நிபந்தனைகள் அவசியம்.

அடிப்படையான உரிமைகளைக் கொண்ட முக்கிய மான ஷரத்துக்களுக்குத் திருத்தம் அமைப்பது அவ் வளவு கடுமையான நிபந்தனைக் குட்பட்டதல்ல என் பதைக் கவனிக்கலாம்.

அரசியலமைப்பிற்குத் திருத்தம் செய்வது இவ்வளவு எளிதாக இருப்பதனுல், புதிய அரசிய லமைப்பு அமுலுக்கு வந்த 1950-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ம் தேதியிலிருந்து சென்ற 7 ஆண்டுகளில் 4 திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்பது வியக்கத் தகுந்ததல்ல.

1951-ஆம் வருஷத்தில் 15-வது ஷரத்துக்கு முதல் திருத்தம் செய்யப்பட்டது.

சென்னை அரசாங்கம்-சண்பகம்-துரைராஜன் ஆகி யவர்களின் வழக்கில் உச்சநீதி மன்றம் கொடுத்த தீர்ப் பின் பயனுகக் கல்வி, சமூகம் ஆகியவற்றில் பிற்பட்ட மக்களுக்கு (ஷெடியூல் இனத்தினர். தீண்டப்படாதார் எனப்பட்டவர், ஷெடியூல் குடிமக்கள், புராதனக் குடி மக்கள்) அவர்கள் முன்னேற்றமடையத் தக்க வசதி கள் செய்ய இராஜ்ய அரசாங்கங்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

அவ்வருஷத்துத் திருத்தமும் எஸ்டேட்டுகளையும் சில உரிமைகளையும் எடுத்துக்கொள்ள உதவும் 31-வது ஷரத்திலே 31 'அ', 31 'ஆ' என்ற இரு உட்பிரிவு களைச் சேர்த்திருக்கிறது. இவற்றின்படி எஸ்டேட்டுகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ளச் சட்டம் செய்யும்போது, அரசியலமைப்பில் உத்திரவாதத்துடன் அளிக்கப்பட்ட உரிமைகளுக்கு முரண்பாடுடையது என்பதனால் அச்சட் டம் சக்தியற்றதாயும் மாறுனதாயும் ஆகாமலிருக்க இத்திருத்தம் உதவுகிறது.

1952-ஆம் ஆண்டில் இரண்டாவது திருத்தம் செய்யப்பட்டது. முன் 7,50,000 மக்களுக்குக் குறைந் தது ஒரு பிரதிநிதி இருக்கவேண்டும் என்று இருந்தது. அதை மாற்றி 5,00,000 மக்களுக்கு, அதிகபட்சம் ஒரு பிரதிநிதிக்குமேல் இருக்கக்கூடாது எனத் திருத்தப் பட்டது.

1954-ஆம் ஆண்டில் மூன்றும் திருத்தம் செய்யப் பட்டது. அதன்படி தேசீயப் பொருளாதாரத்தை முன்னிட்டு அதற்குத்தேவை எனக்கருதுகிற காலம் வரையிலும் மத்திய அரசாங்கத்துக்குச் சில பொருள் களின்மீது சகலவித உரிமையும் அளிக்கப்பட்டது.

1955-ஆம் ஆண்டில் 32-வது ஷரத்தைக் குறித்த நான்காம் திருத்தம் நிறைவேறிற்று. அது பொது நன்மைக்காக எடுத்துக் கொள்ளப்பட்ட சொத்தின் சொந்தக்காரர்களுக்கு அளிக்க வேண்டிய நஷ்ட ஈட்டை அரசாங்கத்தின் இஷ்டத்திற்கே விட அனுமதிக்கிறது. இத்திருத்தத்தினுல் பொது நலத்திற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட சொத்தின் சொந்தக்காரர்களுக்குக் கொடுக்கப்படும் நஷ்ட ஈடு போதுமானதா என்று பார்க்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு இனி கிடை யாது. இப் பிரச்னையைத் தீர்ப்பது பார்லிமெண்டும் இராஜ்ய சட்டசபைகளுமேயன்றி நீதிமன்றங்கள் அல்ல.

மேலும் 1955-ஆம் ஆண்டில் மற்றொரு திருத்தம் அமுலுக்கு வந்தது. இது 305-ம் ஷரத்தில் உள்ள வார்த்தைகளை மாற்றி அமைத்திருக்கிறது. இதன் மூலம் இராஜ்ய அரசாங்கங்களுக்குத் தாங்கள் மேற்கொண்டு நடத்த விரும்பும் எந்த வியாபாரத்திலும் எந்தத் தொழிலிலும் தனி உரிமையை இத் திருத்தம் அளிக்கிறது.

உத்தரப்பிரதேச இராஜ்ய ஸாகீர் — அகமது ஆகியவர்களின் வழக்கில் உச்ச நீதிமன்றம் அளித்த தீர்ப்பின் பயனாக இத்திருத்தம் கொண்டுவரப்பட்டது. அத்தீர்ப்பில் பழைய ஷரத்துப்படி எந்தத் தொழிலிலும் வியாபாரத்திலும் அரசாங்கம் தனி உரிமை பெறலாகாது என்றும், அப்படிப் பெறுவதால் அரசியலமைப்பில் உத்தரவாதத்துடன் மக்களுக்குத்தரப்பட்டுள்ள வியாபார வர்த்தக உரிமைகள் பாதிக்கப்படுகின்றன என்றும் நிலை நாட்டப்பட்டது. ஆனால் இத்திருத்தத்தினால் அரசாங்கத்துக்கு இத்தகைய தனி உரிமை அளிக்கப்படுகிறது.

# இராஜ்ய நிர்வாகத்தின் நெறிமுறைக் கோட்பாடுகளை வகுத்தல்

இந்திய அரசியலமைப்பில் உறுதியளிக்கும் அடிப்படையான உரிமைகளைக் குறிப்பிட்டபின் ராஜ்யங்கள் நிர்வாகத்தில் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகளைக் காட்டும் அத்தியாயம் ஒன்று அதற்கடுத்தாற்போன்று உள்ளது. இவைகளை அரசியலமைப்பில் சேர்த்திருக்கக் கூடாது. அரசியலமைப்பு என்பது ஒரு நீதிப்பத்திரம். நீதிமன்றங்களில் அதன் ஷரத்துக்களை நிலை நாட்டலாம். ஆனால் அரசியல் அமைப்பு, காட்டும் நெறிமுறைகளை எந்த நீதிமன்றங்களிலும் நிலைநாட்ட இயலாது. ராஜ்ய நிர்வாகத்தின் நெறிமுறைக் கோட்பாடுகளைக் குறிப்பிட ஆரம்பிக்கும்போதே 37-வது ஷரத்து ''இப்பாகத்தில் அடங்கி உள்ள ஷரத்துக்கள் எந்த நீதி மன்றத்தாலும் நிறைவேற்றத்தக்கனவல்ல'' எனக் கூறுகிறது. மேலும் அதில் ''எனினும் இதில் குறிக்கப்பட்ட கோட்பாடுகள் நாட்டின் ஆட்சி முறைக்கு அடிப்படையானவையாகும். சட்டங்கள் செய்கையில் இக்கோட்பாடுகளைப் பிரயோகித்தல் ராஜ்யத்தின் கடமையாகும்'', என்று கூறப்பட்டிருக்கிறது. மதுவிலக்கு, பஞ்சாயத்து, கல்வி வளர்ச்சி, தொழிலாளர்களுக்கு வாழப்போதுமான கூலி, புராதன ஞாபகச் சின்னங்களைப் பாதுகாத்தல், குடிகளுக்கு ஒரே விதமான சிவில் சட்டங்கள் செய்தல் முதலான எல்லா மக்களுக்கும் சம்பந்தமுள்ள விஷயங்களைக் குறித்து நிர்வாக நெறிமுறைக் கோட்பாடுகளை அரசியலமைப்பு காட்டுகிறது.

# அரசியலமைப்பும் மக்களது கடமைகளும்

அரசியலமைப்பில் மக்களது கடமைகள் சேர்க்கப் படாவிட்டாலும் அவை மக்களால் ஆழ்ந்து கவனிக் கப்படவேண்டியவையாகும். கடமைகளும் கடமைகளின் படி ஒழுகுதலுமே அரசியலமைப்பில் அமைத்துள்ள உரிமைகளேயும் சௌகர்யங்களேயும் காப்பாற்றும் உற்ற அரண்களாக அமையும். மக்கள் கடமைகளேப் பயன் தரும் வகையில் பூர்த்தி செய்வதனுலேயே அரசாங்கத் திற்கு உயிரும் செயலும் ஏற்படுகின்றன. ஒரு குடும் பத்தின் அங்கத்தினராகிய தாயோ, தந்தையோ அக் குடும்பத்திற்காக உழைத்து, குழந்தைகளின் உணவுக் கும், வளர்ப்புக்கும் வழி தேடுவதனுல்தான் ஒழுக்கமும் சிறந்த வாழ்வும் பெற்ற பிரஜைகளாக அக்குழந்தைகள் ஆவார்கள்.

அரசாங்கத்திற்கும், அதன் சட்டங்களுக்கும் அம் மக்கள் காட்டும் கீழ்ப்படிதலும், நாட்டுப் பற்றுமே நாட் டின் உயிர்நாடியை வலுப்படுத்துகின்றன. ஒரு நாட்டு மக்களின் கடமைகளிலெல்லாம் தலே சிறந்தது அவர்கள் அந்நாட்டு அரசியலமைப்பை நிலே நாட்டுதலேயாகும். அரசாங்கத்தின் வாழ்விற்கு—சுதந்திர அரசாங்கத்தின் சுதந்திரமக்களின் சுதந்திர வாழ்விற்கு—அது பக்க பலம் பெற்ற அடிப்படையல்லவா ?. இந்தியாவின் அரசியலமைப்பு, நீதிமன்றங்களின் பாதுகாவலில் அமைக்கப் பெற்றிருக்கிறது என்பது உண்மையே. அரசியல் அமைப்புச்சட்டத்தின் தத்துவங்களே அந் தந்தச் சட்டசபைகளேச்சார்ந்த அரசாங்கங்கள் ஒழுங் காக மேற்கொண்டு நடக்கின்றனவா என்று நாட்டின் சட்டசபைகள், மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய சபை

கள் என்ற முறையில் கண்காணிக்கும் என்று எதிர் பார்ப்பது உண்மையே. ஆனால் அரசியல் அமைப்புச் சட்டத்தின்கீழ் ஏதேனும் தவறு ஏற்படும்போது அதனால் பாதிக்கப்பட்டவர்களோ அதில் கருத்துடையவர்களோ நீதிமன்றங்களின் முன் அத்தவற்றைக்கொண்டு வந்தால் தான் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியும். அச் சட்டத்தின் கீழ் மிகப்பெரிய தவறு ஏற்பட்டும் அதில் ஒருவரும் கருத்துச் செலுத்தி நீதிமன்றங்களின் முன் கொண்டு வந்து நியாயம் நாடாவிட்டால் அத்தகைய குற்றங்களை நீதிமன்றங்கள் கவனிக்கமாட்டா.

சட்ட சபைகளில் உள்ள நம் பிரதிநிதிகள் இவ் விஷயமாகத் தங்கள் கடமைகளில் கவனக்குறைவாகவும், அலட்சியமாகவும் இருக்கக்கூடும். அரசியல் அமைப்புச் சட்டம் நீதிமன்றங்களின் மேற்பார்வை, சட்டசபை களின் கடமை ஆகியவற்றின் பாதுகாப்பில் அமைந்து இருக்கின்றது. ஆயினும் அவற்றையும் மீறி ஏற்படும் குறைபாடுகளை நீக்கி, சட்டம், சட்டத்தின் தத்துவம் ஆகியவற்றை நிலைநிறுத்துவதிலே மக்கள் காட்டும் ஊக்கமே அச்சட்டத்திற்குச் சிறந்த உதவியாக நிற்கும். பிரஜையின் விழிப்புத்தன்மையே அரசியலமைப்பின் உண்மையான அரண். "சுதந்திரத்தைக்காப்பாற்று வதற்குச் செய்யவேண்டிய தியாகம் எக்காலமும் விழிப் புடனிருத்தலே" என நெடுங்காலத்திற்கு முன்னர் அறிஞர் ஒருவர் கூறினர். இத்தகைய இடையரு விழிப்புணர்ச்சியைப் பிரஜைகளே மேற்கொள்ள வேண்டும். தனிப்பட்ட மனிதர், நகராண்மைக்கழகம், அக்கழகக் கமிஷனர், மாவட்டக்குழு, ஒரு இராஜ்ய அரசாங்கம்—அதன் உத்தியோகஸ்தர்கள், மத்திய அரசாங்கம் — அதன் உத்தியோகஸ்தர்கள் ஆகிய எந்த இடத்திலே யிருந்தேனும் அரசியலமைப்பினல் பிரஜைகளுக்கு உத்திரவாதத்துடன் தரப்பட்ட உரிமை களுக்கு ஒரு சிறிது பாதகம் ஏற்பட்டாலும், ஒவ்வொரு பிரஜையும் தனிப்பட்ட முறையிலோ, மக்கள் கழகங்கள்

மூலமாகவோ, சமூக சுதந்திர சங்கங்கள் மூலமாகவோ, வெகு விழிப்புடன் அரசியலமைப்பைக்காக்கவேண்டும்.

பத்திரிகைகளுக்குக் கடிதங்கள் எழுதியும், எதிர்ப்புப் பொதுக் கூட்டங்கள் கூட்டியும், மற்ற நடவடிக்கைகள் மூலமாகவும் தனித்த முறையிலோ, மற்றவர்களோடு சேர்ந்தோ அரசியல் அமைப்புச்சட்டத்திற்கு மாறுக ஏற்படும் சிறு குற்றங்களையும், அரசாங்கம், பொதுமக்கள் ஆகியோரின் கவனத்துக்குக் கொண்டுவர வேண்டும். இம் முயற்சிகள் பயன்படாவிட்டால் தம் தொகுதிச் சட்டசபைப் பிரதிநிதிகளை அக்குற்றத்தில் கவனம் செலுத்தச்செய்து தக்க வழியில் நடவடிக்கை எடுக்கும்படிச் செய்யவேண்டும். இதற்கு உரிமைபெற நம்மை வாக்காளராகப் பதிவு செய்துகொண்டு தேர்தலில் செயல்முறையில் ஈடுபட்டு நம்வாக்கைப் பதிவுசெய்திருக்கவேண்டும். இத்தகைய சட்டரீதியான முறைகள் பயன் அளிக்காவிட்டால் நாம் அக்குறைபாட்டை நீதிமன்றங்களுக்குக் கொண்டுபோகத் தயாராக வேண்டும். அப்படி அரசாங்க உயர் நீதிமன்றத்திலும், (High Court) உச்ச நீதிமன்றத்திலும் (Supreme Court) அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ் வழக்குத் தொடர்வதற்கு அதிகப் பணச்செலவு ஆகும். அது தனிப்பட்ட முறையில் நம்மால் முடியாமலிருக்கலாம். அப்போது சீரிய வகையில் அமைக்கப்பட்டகட்சி, நல்ல பணவசதிபெற்ற மக்கள் கழகம், சமூக சுதந்திர சங்கம், மற்றும் இதுபோன்ற வேறு சங்கம் ஆகிய ஒன்றின் அங்கத்தினராக இருந்து இவ்வழக்கைத் தொடரலாம். இந்த வகையில் ஆங்கிலேயரின் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்குப் போரிட்ட சிறந்த அந்நாட்டுப் பெரியார் பலர் நமக்கு அரிய வழிகாட்டிகளாக அமைந்து உள்ளனர்.

1637-ஆம் ஆண்டில் ஹாம்ப்டென் என்பவர் சட்டசபை அனுமதிக்காத 'கப்பல்பணம்'' என்ற

வரியைக் கொடுக்க மறுத்தார். அதற்காகச் சிறையும் சென்ருர். ஜான் வில்கிஸ் என்பவர் அரசாங்கத்தைத் தாக்கிப் பத்திரிகைக்கு எழுதியதற்காக, தம்மைக் கைது செய்யப் பிறப்பித்த கட்டளைகள் (Warrents) நீதியற்றவை என்றும், தாம் பார்லிமெண்டின் அங்கத்தினர் என்ற ஹோதாவில் தமக்குள்ள (கைது செய்யப்படாமை, சிவில் வழக்குத் தொடராமை ஆகிய) உரிமைகளைப் பாதிப்பவை என்றும் வாதித்தார். தானியேல் ஓ' கன்னல் என்பவர் பல நூற்ருண்டுகளாகக் காதோலிகர் தாங்கிவந்த அரசியல் இன்னல்களிலிருந்து கடைத்தேறப் போராடினுர்.

இவர்களேயன்றிப் பாலகங்காதர திலகர், மகாத்மா காந்தி, ஜவகர்லால் நேரு போன்ற தேசபக்தர்களும் மக்கள் தாங்கள் கருதியபடி எழுதவும் பேசவும், நடக்கவும் உரிமைபெறவேண்டும் எனப்போராடி அவற்றிற்காகச் சிறை செல்லவும் சித்தமாக இருந்தனர். எனவே, அரசியல் அமைப்புச் சட்டத்தின் கீழ் இந்திய மக்களாகிய நமக்குக்கிடைத்துள்ள உரிமைகளையும், சுதந்திரங்களையும் நாம் காப்பாற்ற, தக்க ஏற்பாடுகள் செய்து உழைக்கவேண்டும் என்பதற்கு இவர்கள் செயல்கள் நம்மைத் தூண்டுகின்றன. அரசியல் அமைப்புச்சட்டம் நம்முடையதே; நிறுவப்பட்டு ஆட்சி புரியும் அரசாங்கங்களும் நம்முடையனவே. அவை நீடித்து நம் நன்மைக்காகச் செயல் புரிவது நம்மையும் நாம் கொண்டுள்ள நோக்கத்தையுமே பொறுத்திருக்கிறது. அரசியல் அமைப்பில் சில உரிமைகளும், சுதந்திரங்களும் நமக்குச் சேர்க்கப்பட்டதனுலேயே அவை நம் நன்மைக்காக ஏற்பட்டுவிட்டன, என நினைத்துவிடக்கூடாது. இவ்வுரிமைகள் தீயவழியில் பயன்படுத்தப்படாமலிருக்க நாம் நம் உரிமைகளை நிலைநாட்டவேண்டும், அவற்றை நல்லமுறையில் பயன்படுத்தவேண்டும்—பாதுகாக்கவேண்டும். சுதந்திர நிலையங்களும் சுயாட்சியும் நம் நன்மைக்காக நடைபெறவேண்டுமானல் நாம்

அம்முறையில் அவை நடைபெறும்படிப் பார்த்துக் கொள்ளவேண்டும். நம் சட்டசபைகளுக்குத் தக்கவர்களைப் பிரதிநிதிகளாக அனுப்பவேண்டுமானல் அத்தகையோர் தேர்தலில் வெற்றிபெறும்படி முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். இப்பிரதிநிதிகள் சட்டசபைகளில் பணியாற்ற வேண்டுமானல் அவர்களை அனுப்பிய மக்கள், அவர்கள் செய்யும் பணிகளைக் கவனித்துவர வேண்டும். மேலும் இராஜ்ய சட்டசபைகளில் தங்கள் கடமைகளை, அவர்கள் சரிவர ஆற்றித் தங்களைத் தேர்ந்தெடுத்துக் கௌரவம் செய்த மக்களுக்கு நல்லகைம்மாறு செய்கிறார்களா என்று பார்த்துக் கொள்ளவும் வேண்டும். சட்டசபைகளுக்கு நாம் அனுப்பிய பிரதிநிதிகளிடம் தொடர்பு வைத்துக்கொள்ளவேண்டும். நம் தேவைகளையும் குறைபாடுகளையும் குறித்து அவர்களுக்கு எழுதவேண்டும். அவர்கள் அயரும்போது அவர்களை அதட்டி விழிப்புறச்செய்யவேண்டும்; நல்ல தொண்டு செய்யும்போது புகழவேண்டும். அப்போது அவர்கள் மேலும் மேலும் நல்ல வேலைகள் செய்வார்கள். நம் தொகுதிகளில் அடிக்கடிப் பொதுக் கூட்டங்கள் கூட்டி அவற்றில் நம் பிரதிநிதிகளை அழைத்து அவர்கள் சட்டசபைகளில் ஆற்றிவரும் வேலையை விளக்குமாறு கூறவேண்டும். பிரதிநிதிகள் அடங்கிய அரசாங்கத்தின் நலத்திற்காகவும் அதன் சிறந்த பணிகளுக்காகவும் சட்டசபை அங்கத்தினருக்கும், அவரைத்தேர்ந்தெடுத்த வாக்காளர்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டியது அத்யாவசியம்.

"சிவில் கிரிமினல் சட்டங்களை நிலைநாட்டுதல் அரசாங்கத்தின் வேலை. அரசியல் அமைப்புச் சட்டத்தை நிலைநாட்டுதல் பொதுஜனத்தின் வேலை. திருடனைத் தண்டிக்கச் சக்தியற்ற சட்டமுள்ள நாடும், அரசாங்கத்தின் செயல்களைக் கட்டுப்படுத்த இயலாத சமூகத்தைக்கொண்ட நாடும் சீரிய அரசியல் அமைப்பிற்கு நேர்மாறானவை. முன்னதால் அரசியல் குழப்பமும் பின்னதால் கொடுங்கோன்மையும் ஏற்படும்" என ஆகடன் பிரபு கூறியிருக்கிறார்.